# 2016 பக்ரீத் சிறப்பு தொடர் கட்டுரைகள்

## ஆசிரியர்: உமர்

பொருளடக்கம்



---

# 1: அல்லாஹ்விற்கு ஏன் பலியும் இரத்தமும் தேவைப்பட்டது?

*நான் சிறுவனாக இருந்த போது கொண்டாடிய பக்ரீத் பண்டிகைகள் இன்னும் ஞாபகத்தில் பசுமையாக இருக்கிறது. பக்ரீத் பண்டிகையின் இரண்டு நாட்களுக்கு முன்பாகவே அப்பா ஒரு ஆட்டை வாங்கிவிடுவார். அந்த ஆட்டுக்கு தேவையான புல்லை நான் அதற்கு உண்ணக்கொடுப்பேன். பக்ரீத் பண்டிகையன்று, மசூதிக்குச் சென்று தொழுதுவிட்டு, வீடு திரும்பிவோம். ஆட்டை அறுப்பதற்கும், அதன் தோலை உரித்து கறி வெட்டுவதற்கும் ஆட்களை அப்பா அழைத்து வருவார்.*

*ஆடு அறுக்கப்படும் போது அதனை பார்க்கவேண்டாம் என்று பெரியவர்கள் எங்களை தடுப்பார்கள். ஆட்டு இறைச்சி மூன்று சம பகுதிகளாக பிரிக்கப்படும். ஒரு பங்கு சொந்தக்காரர்களுக்கும் நண்பர்களுக்கும் கொடுக்கப்படும். இன்னொரு பங்கு ஏழை முஸ்லிம்களுக்கு. மூன்றாவது பங்கு எங்களுக்கு. நான்கு கறித்துண்டுகளை சின்ன பொட்டலங்களாக கட்டி, எங்கள் பகுதியில் இருக்கும் இதர முஸ்லிம்களின் வீடுகளுக்குச் சென்று கொடுத்துவருவோம். அடுத்த சில நாட்கள் எங்கள் வீட்டில் அசைவ சமையல் தான், காயவைத்த கபாப் வாசனை வீடு முழுக்க வீசும். இந்த நேரத்தில் அசைவ உணவை சாப்பிடாதவர்கள் வீட்டிற்கு வந்தால் அவ்வளவு தான் அவர்களின் கதை. மாடியில் காயவைத்த கபாப் துண்டுகளை மாலையில் கொண்டு வந்து பத்திரப்படுத்துவோம், மறுநாள் காலை மறுபடியும் காயவைப்போம். அடுத்த சில வாரங்கள், உணவு பறிமாறப்படும் போது, கபாப் துண்டுகள், அதிகமாக எங்கள் சாப்பாட்டில் காணப்படும்.*

## பக்ரீத் பண்டிகை

*சரி விஷயத்துக்கு வருகிறேன். இன்னும் பத்து நாட்களில் பக்ரீத் பண்டிகை வருகிறது. பக்ரீத் பண்டிகைக்கு முன்பாக ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி முஸ்லிம்களோடு உரையாடலாம் என்று விரும்பி இந்த சிறிய தொடர் கட்டுரைகளை எழுதுகிறேன். இவைகள் பற்றி முஸ்லிம் சகோதரர்கள் தங்கள் விமர்சனங்களை முன்வைக்கலாம்.*

***கருப்பொருள்:*** *கிறிஸ்தவம் பற்றி முஸ்லிம்கள் முன்வைக்கும் குற்றச்சாட்டுக்களில் மிகவும் முக்கியமானவைகள் இவைகள் தான்:*

*அ) ஒருவரின் சுமையை (பாவங்களை) இன்னொருவர் சுமக்கமுடியாது.*

*ஆ) உலக மக்களின் பாவங்கள் அனைத்தையும், இயேசுவின் மீது சுமத்தி, அவரை தண்டிப்பது என்பது அநியாயமாகும், இதனை இறைவன் ஒருபோதும் செய்யமாட்டான்.*

இ) செய்யாத குற்றத்திற்காக ஒருவரை தண்டிப்பது தவறானதாகும்.

ஈ) இறைவன் பாவங்களை மன்னிக்கவேண்டுமென்றால், அவன் ஒரு வார்த்தையில் மன்னித்துவிடலாம். மனிதர்களை மன்னிக்க இறைவனுக்கு பலிகள் பரிகாரங்கள் தேவையில்லை. ஒரு குற்றவாளியின் குற்றத்தை எடுத்து நிரபராதியின் மீது சுமத்தி, அந்த குற்றவாளியை தண்டிக்காமல் இருப்பதும், ஆனால், அந்த நிரபராதியை தண்டிப்பதும் அநீதி இல்லையா?

இப்படிப்பட்ட பல கேள்விகளை முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களிடம் கேட்பார்கள். இக்கேள்விகள் நியாயமானவைகளாக தெரிகின்றதல்லவா! குர்-ஆனும், ஹதீஸ்களும் இவைகள் பற்றி என்ன சொல்கின்றன என்பதை ஆய்வு செய்வது இத்தொடர் கட்டுரைகளின் நோக்கம் ஆகும். இந்த தற்போதைய கட்டுரையில் குர்-ஆனில் காணப்படும் பக்ரீத் பண்டிகை (ஈத் அல்-அதா) சம்மந்தப்பட்ட சில வசனங்களை மட்டும் ஆய்வு செய்து, சில கேள்விகளை முன்வைப்போம்.

## இப்ராஹீம் தம் மகனை பலியிட முயன்ற நிகழ்ச்சி:

இந்த நிகழ்ச்சி எல்லோருக்கும் தெரிந்த ஒன்று தான். பைபிளில் ஆதியாகமம் 22ம் அத்தியாயத்தில் இதனை காணலாம். குர்-ஆன் 37ம் அத்தியாயத்திலிருந்து சில வசனங்களை படிப்போம்.

**குர்-ஆன் 37:102-107**

37:102. பின் (அம்மகன்) அவருடன் நடமாடக்கூடிய (வயதை அடைந்த) போது அவர் கூறினார்: "என்னருமை மகனே! நான் உன்னை அறுத்து பலியிடுவதாக நிச்சயமாகக் கனவு கண்டேன். இதைப்பற்றி உம் கருத்து என்ன என்பதைச் சிந்திப்பீராக!" (மகன்) கூறினான்; "என்னருமைத் தந்தையே! நீங்கள் ஏவப்பட்டபடியே செய்யுங்கள். அல்லாஹ் நாடினால் - என்னை நீங்கள் பொறுமையாளர்களில் நின்றுமுள்ளவனாகவே காண்பீர்கள்." 37:103. ஆகவே, அவ்விருவரும் (இறைவன் கட்டளைக்கு) முற்றிலும் வழிப்பட்டு, (இப்ராஹீம்) மகனைப் பலியிட முகம் குப்புறக்கிடத்திய போது.

37:104. நாம் அவரை "யா இப்ராஹீம்!" என்றழைத்தோம்.

37:105. "திடமாக நீர் (கண்ட) கனவை மெய்ப்படுத்தினீர். நிச்சயமாக நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி கொடுத்திருக்கிறோம்.

37:106. "நிச்சயமாக இது தெளிவான ஒரு பெருஞ் சோதனையாகும்."

37:107. ஆயினும், நாம் ஒரு மகத்தான **பலியைக்** கொண்டு அவருக்குப் **பகரமாக்கினோம்**.(முஹம்மது ஜான் தமிழாக்கம்).

(ஆபிரகாம் பலியிட முன்வந்தது, ஈசாக்கையா, இஸ்மவேலையா என்பதைப் பற்றி இக்கட்டுரையில் ஆராயத்தேவையில்லை, பின் குறிப்பில் கொடுக்கப்பட்ட கட்டுரைகளை படிக்கவும்).

## அல்லாஹ்விற்கு ஏன் பலியும் இரத்தமும் தேவைப்பட்டது?

மேற்கண்ட வசனங்களை நன்றாக கவனியுங்கள். இப்ராஹீமின் தியாகத்தை, அல்லாஹ் மெச்சிக்கொள்கிறான். ஆனால், அதோடு நின்று விடாமல், ஒரு ஆட்டை ஆபிரகாமுக்கு காட்டி, அதை பலியிட சொல்கின்றான். குர்-ஆன் 37:107ம் வசனத்தை கவனியுங்கள், "நாம் ஒரு மகத்தான பலியைக் கொண்டு அவருக்குப் பகரமாக்கினோம்". இந்த வசனத்தை மட்டும், இதர தமிழாக்கங்களிலும், ஆங்கிலத்திலும் பார்த்துவிட்டு, நம் கேள்விகளுக்குச் செல்வோம்.

***அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:***

37:107. ஆகவே, மகத்தானதொரு **பலியை** அவருக்கு **பகரமாக்கினோம்**.

***இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:***

37:107. மேலும், ஒரு பெரும் **பலியை ஈடாகக் கொடுத்து** அக்குழந்தையை நாம் **விடுவித்துக் கொண்டோம்**.

***பிஜே தமிழாக்கம்:***

37: 107. பெரிய ***பலிப்பிராணியை*** அவருக்குப் ***பகரமாக்கினோம்.***

**Yusuf Ali:** And We **ransomed** him with a momentous **sacrifice**:

**Khalifa:** We **ransomed** (Ismail) by substituting an **animal sacrifice**.

**Palmer:** And we **ransomed** him with a mighty **victim**;

***இந்த வசனத்தை பார்க்கும் போது, கீழ்கண்ட கேள்விகள் எழுகின்றன:***

1) *ஆபிரகாமின் மகன் கொல்லப்படுவதற்கு முன்பு அல்லாஹ் அவனை காப்பாற்றிவிட்டான், இது நல்லது தான். ஆனால், பலியிட குறிக்கப்பட்ட ஆபிரகாமின் மகனுக்கு பதிலாக ஒரு பலியை அல்லாஹ் ஏன் தயார் படுத்தவேண்டும்?*

2) *கொல்லப்படவேண்டியவனுக்கு பதிலாக, அந்த இடத்தில் ஏன் ஒரு ஆடு கொல்லப்படவேண்டும்?*

3) *அல்லாஹ் ஆபிரகாமை மெச்சிக்கொண்டுவிட்ட பிறகு, அவர்களை அப்படியே வீட்டிற்கு அனுப்பியிருக்கவேண்டியது தானே! ஏன் அந்த இடத்தில் ஒரு மிருகம் கொல்லப்படவேண்டும் என்று அல்லாஹ் விரும்பினான்?*

4) *அல்லாஹ் ஆபிரகாமின் மகனை காப்பாற்றுவதை முன்னமே திட்டமிட்டிருந்தான், அங்கு ஒரு ஆட்டை தயார் படுத்தி வைத்திருந்தது ஏன்? ஒரு ஆட்டின் பலி வேண்டும் என்று ஏன் அல்லாஹ் விரும்பினான்?*

## ஆபிரகாமின் மகனை விடுவிக்கவேண்டியது ஏன்?(Ransom)

*போரில் பிடிப்பட்ட அடிமைகளை விடுவிப்பதற்காக, "மீட்பு பணம் அல்லது பிணைப்பணம்" என்றுச் சொல்லக்கூடிய பணத்தை கொடுத்து, அடிமைகளை விடுவிப்பார்கள். அது போல, ஒரு மகத்தான பலியைக் கொண்டு நாம் விடுவித்தோம் என்று அல்லாஹ் சொல்வது ஏன்?*

1) IFT *தமிழாக்கத்தில் "**ஒரு பெரும் பலியை ஈடாகக் கொடுத்து அக்குழந்தையை நாம் விடுவித்துக் கொண்டோம்.**" என்று விவரமாக விளக்கப்பட்டுள்ளது.*

2) *ஆபிரகாமின் மகன் எப்போது அடிமையானான்? யாருக்கு அடிமையானான்?*

3) *அவனை யாரிடமிருந்து ஆபிரகாம் விடுவித்தான்?*

4) *ஒருவேளை அல்லாஹ் மீட்பு பணம் (ஆடு) கொடுத்து விடுவித்தான் என்றுச் சொன்னால், யாரிடமிருந்து அல்லாஹ் விடுவித்தான்? அல்லாஹ்வை விட பெரியவன் யார் இருக்கின்றார்கள்? தனக்குத் தானே மீட்பு பலியைக் கொடுத்துக்கொண்டு, அக்குழந்தையை அல்லாஹ் மீட்டானா? இதனை எப்படி புரிந்துக்கொள்வது?*

5) *இரத்தம் சிந்தாமல் ஒருவர் மீட்கப்படமுடியாதா?*

6) ஒருவரின் பாரம் ஒருவர் சுமக்கமுடியாது என்றுச் சொன்னால், ஏன் அந்த ஆடு அநியாயமாக ஆபிரகாமின் மகனுக்காக கொல்லப்படவேண்டும்? ஆடு நிரபராதி தானே! யாரோ ஒருவரை மீட்க இந்த ஆடு ஏன் சாகவேண்டும்?

7) ஆபிரகாமே, உன் தியாகத்தை நான் பார்த்துவிட்டேன், குழந்தையை கொல்லாதே, சந்தோஷமாக வீட்டுக்குப்போ என்றுச் சொல்வதை விட்டுவிட்டு, ஏன் அல்லாஹ் ஒரு மகத்தான பலியை அங்கு கொடுத்தான்?

8) ஒருவேளை, பலியில்லாமல் விடுதலை கிடைக்காது, இரத்தம் சிந்தப்படாமல் மன்னிப்பு இல்லை, தண்டனையிலிருந்து விடுதலை இல்லை என்பதைச் சொல்லவேண்டி, அல்லாஹ் இப்படி ஆட்டை பலியிடச் சொன்னானா?

முஸ்லிம்களே, குர்-ஆனில் ஒருவரின் பாரத்தை ஒருவர் சுமக்கமுடியாது என்றுச் சொல்லும் 6:164, 17:13-15 போன்ற வசனங்கள் உண்டு என்று எனக்கு எடுத்துக் காட்டாதீர்கள்! அவைகள் பற்றி அடுத்தடுத்த தொடர்களில் பார்ப்போம். இந்த கட்டுரையை பொருத்தமட்டில், குர்-ஆன் 37:107ல், ஏன் அல்லாஹ் ஒரு ஆட்டை பலியிட அனுமதித்தான்? அதன் பின்னனி என்ன? இப்படி பலியிட்டு இரத்தம் சிந்துவதினால் அவனுக்கு (அல்லாஹ்விற்கு) என்ன நன்மை? அல்லது ஆபிரகாமின் மகனுக்கு என்ன லாபம்? என்பதை மட்டுமே விளக்குங்கள்.

அல்லாஹ் ஆபிரகாமுக்கு மகனை பலியிடும்படி கனவை கொடுத்தான், அவனே அதனை தடுத்தும்விட்டான், அவ்வளவு தான். இந்த இடத்தில் பலி எங்கே வந்தது? "மீட்புப்பணம்"(Ransom) ஏன் வந்தது? ஏன் இரத்தம் சிந்தப்படவேண்டும்?

ஆபிரகாம் கத்தியை ஓங்கிவிட்டார், எனவே அதற்கு இரத்தத்தை காட்டாமல் கீழே வைக்கக்கூடாது என்று சில முஸ்லிம்கள் சொல்லக்கூடும். தமிழ் படங்களில் ஹீரோ "நான் மேலே எடுத்த கத்திக்கு இரத்தத்தை காட்டாமல் கீழே வைக்கமாட்டேன்" என்றுச் சொல்வது போல, பஞ்ச் வசனம் சொல்லவேண்டாம். இது மிகவும் முக்கியமான விஷயம், எந்த ஒரு காரணமும் இல்லாமல், அல்லாஹ் பலிக்காக ஆட்டை கொடுத்து, ஆபிரகாமின் மகனை நான் மீட்டுக்கொண்டேன் என்று சொல்லமாட்டான்.

ஆட்டை அறுக்கும் படி அல்லாஹ் சொல்லவில்லை, ஆபிரகாம் சுயமாக செய்தார் என்று சொல்லவருகிறீர்களா? குர்-ஆன் 37:107ம் வசனத்தை நன்றாக படியுங்கள், அல்லாஹ் சுயமாகவே பலிக்காக ஒரு ஆட்டை கொடுத்தானாம், அதுவும் அது மகத்தான ஒரு பலியாம்!

முஸ்லிம்களில் சிலர், அந்த ஆடு, அல்லாஹ்வின் சொர்க்கத்தில் பல (40) ஆண்டுகள் மேய்ந்த ஆடு என்றும், அதனைத் தான் அக்குழந்தையை மீட்க அல்லாஹ் கொடுத்தான் என்றும் சொல்வார்கள். அது சொர்க்கத்தின் ஆடோ, பூமியின் ஆடோ! அது பிரச்சனை அல்ல! கேள்வி என்னவென்றால், ஏன் அந்த ஆடு மரிக்கவேண்டும்? ஏன் அதன் இரத்தம் சிந்தப்படவேண்டும் என்பது தான்?

இந்த கேள்விகளுக்கு பதில் சொல்ல விரும்பும் முஸ்லிம்கள், குர்-ஆன் 37:107ம் வசனத்தை ஆய்வு செய்து பதில் சொல்லுங்கள்.

அடுத்த தொடரில் சந்திக்கிறேன்...

***அடிக்குறிப்புக்கள் (பயனுள்ள கட்டுரைகள்):***

1] ***தியாகத் திருநாள் - விக்கிபீடியா***

2] ***இஸ்மாயில் தான் பலியிட கொண்டுபோகப்பட்டார் என்ற இஸ்லாமியர்களின் வாதம்***

3] **Abraham in the Qur'an and the Bible - D. ISHAQ OR ISMAIL: THE MUSLIM DILEMMA**.

4] **Answering Islam index - ISAAC**

5] **Islamic Allegations Against Jesus And The Atonement**

6] **Atonement by Blood Sacrifice in Islam**

7] **Islam's Morally Grotesque Doctrine of Substitutionary Atonement**

8] **The Problems with the Islamic Doctrine of Atonement**

9] **Trinity, Atonement & Blood Sacrifice III : Sin and Atonement 1**

10] **HOW CAN ONE MAN PAY FOR THE SINS OF ANOTHER?**

---


***பக்ரீத் கட்டுரைகள் பக்கம்***

***ரமளான் கட்டுரைகள் பக்கம்***

***உமரின் கட்டுரைகள் பக்கம்***


---

## 2: ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமக்கமுடியாது ஆனால் முடியும் – குர்-ஆனின் குழப்பம்

***முந்தைய கட்டுரையில்***, *குர்-ஆன்* 37:107*ம் வசனத்தின் அடிப்படையில் முஸ்லிம்களிடம் சில கேள்விகள் கேட்கப்பட்டது. இப்ராஹீம் தம் மகனை பலியிடும் போது தடுத்து நிறுத்திய அல்லாஹ், அவனுக்கு பதிலாக ஏன் ஒரு ஆட்டை பலி வாங்கினார்? ஒரு மனிதனை விடுவிக்க, ஏன் ஒரு ஆட்டின் இரத்தம் சிந்தப்பட வேண்டும் என்று அல்லாஹ் விரும்பினார்? போன்ற கேள்விகள் முன்வைக்கப்பட்டது.*

*தற்போதைய கட்டுரையில், ஒருவரின் பாரத்தை (பாவங்களை) இன்னொருவர் சுமக்கமுடியாது என்று குர்-ஆன் சொல்லும் வசனங்களையும், அவைகளுக்கு முரணாக இருக்கும் இதர குர்-ஆன் வசனங்களையும் சுருக்கமாக ஆய்வு செய்யப்போகிறோம்.*

### 1. ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமக்கமுடியாது

*கீழ்கண்ட வசனங்களில் ஒருவரின் சுமைகளை இன்னொருவர் சுமக்கமுடியாது என்று குர்-ஆன் சொல்கிறது.*

**குர்-ஆன் 6:164**

6:164. "*அல்லாஹ்வை அன்றி மற்றெவரையாவது நான் இறைவனாக எடுத்துக் கொள்வேனா? எல்லாப் பொருள்களுக்கும் அவனே இறைவனாக இருக்கின்றான் - பாவம் செய்யும் ஒவ்வோர் ஆத்மாவும் தனக்கே, கேட்டைத் தேடிக்கொள்கிறது; ஓர் ஆத்மாவின் (பாவச்)சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது. பின்னர், நீங்கள் (அனைவரும்) உங்கள் இறைவன் பக்கமே திரும்பிச் செல்ல வேண்டியதிருக்கிறது; அப்போது நீங்கள் பிணங்கி விவாதம் செய்து கொண்டிருந்தவை பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்" என்று (நபியே!) நீர் கூறும்.*

**குர்-ஆன் 17:13-15**

17:13. *ஒவ்வொரு மனிதனுடைய செயல் குறிப்பையும் அவனுடைய கழுத்தில் நாம் மாட்டி இருக்கிறோம்; கியாமத் நாளில் அவனுக்காக ஓர் ஏட்டை வெளிப்படுத்துவோம் - திறக்கப்பட்ட நிலையில் அதனை அவன் பெற்றுக் கொள்வான்.*

17:14. “நீ உம் புத்தகத்தைப் படித்துப் பார்! இன்று உனக்கு எதிராக உன்னுடைய ஆத்மாவே கணக்கதிகாரியாக இருக்கப் போதும்” (என்று அப்போது நாம் கூறுவோம்).

17:15. எவன் நேர்வழியில் செல்கின்றானோ, அவன் தன்னுடைய நன்மைக்காகவே நேர் வழியில் செல்கிறான்; எவன் வழி கேட்டில் செல்கின்றானோ, அவன் தனக்கே கேடு செய்து கொண்டான்; (நிச்சயமாக) ஒருவனுடைய பாவச்சுமையை மற்றொருவன் சுமக்கமாட்டான்; (நம்) தூதரை அனுப்பாத வரையில் (எவரையும்) நாம் வேதனை செய்வதில்லை.

**குர்-ஆன் 35:18**

35:18. (மறுமை நாளில் தன்) சுமையைக் சுமக்கும் ஒருவன், வேறொருவனுடைய சுமையைச் சுமக்க மாட்டான்; அன்றியும் பளுவான சுமையைச் சுமப்பவன், அதில் (சிறிதேனும்) சுமந்து கொள்ளும்படி (வேறொருவனை) அழைத்தாலும், அவன் சொந்தக்காரனாக இருந்தபோதிலும் - அதில் சிறிதளவு கூட அவ்வாறு சுமந்து கொள்ளப்படாது; எவர் மறைவிலும் தங்கள் இறைவனை அஞ்சி தொழுகையையும் நிலைநாட்டி வருகின்றார்களோ அவர்களையே நீர் எச்சரிக்கை செய்வீர். எவர் பரிசுத்தமாயிருக்கிறாரோ அவர், தம் நன்மைக்காகவே பரிசுத்தமாக இருக்கின்றார்; அல்லாஹ்விடமே யாவும் மீண்டு செல்லவேண்டியுள்ளது.

**குர்-ஆன் 39:7**

39:7. (அவனை) நீங்கள் நிராகரித்தாலும் (அவனுக்குக் குறையேதுமில்லை) - நிச்சயமாக அல்லாஹ் உங்களிடம் தேவையற்றவன்; எனினும் தன் அடியார்களின் (நன்றி மறக்கும்) நிராகரிப்பை - குஃப்ரைக் கொண்டு அவன் திருப்தி கொள்வதில்லை; நீங்கள் நன்றி செலுத்துவீர்களாயின், உங்களைப் பற்றி அவன் திருப்தி கொள்வான். அன்றியும், (தன் பாவச் சுமையைச்) சுமக்கிறவன், மற்றொருவன் (பாவச்) சுமையைச் சுமக்க மாட்டான்; பின்னர் நீங்கள் திரும்பிச் செல்லுதல் உங்களுடைய இறைவனிடமே யாகும்; நீங்கள் செய்து கொண்டிருந்தது பற்றி அப்போது அவன் உங்களுக்கு அறிவிப்பான்; நெஞ்சங்களிலிருப்பதை அவன் நிச்சயமாக நன்கறிபவன்.

**குர்-ஆன் 53:38**

53:38. (அதாவது:) சுமக்கிறவன் பிறிதொருவனின் சுமையைச் சுமக்க மாட்டான்;

(மேற்கண்ட வசனங்களை அனைத்தும் முஹம்மது ஜான் தமிழாக்கத்திலிருந்து எடுக்கப்பட்டது).

## 2. ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமப்பார் (குர்-ஆனின் முரண்பாடு)

மேற்கண்ட வசனங்கள் மிகவும் தெளிவாகவும், ஆணித்தரமாகவும் ‘ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமக்கமுடியாது என்றும், ஒருவரின் சுமையில் சிறிது கூட இன்னொருவர் சுமக்கமுடியாது என்றும் சொல்கிறது’. ஆனால், இதே குர்-ஆன் இன்னொரு இடத்தில் மேற்கண்டவைகளுக்கு எதிராக சொல்வதை காணமுடியும். இது எப்படி சாத்தியமாகும். குர்-ஆன் தனக்குத்தானே முரண்படுகின்றது. இவ்வசனங்களை நான்கு தமிழாக்கங்களிலிருந்து படிப்போம்.

**குர்-ஆன் 16:24,25**

***டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:***

16:24. “உங்களுடைய இறைவன் எதை இறக்கி வைத்தான்?” என்று (குர்ஆனை குறிப்பிட்டு) அவர்களிடம் கேட்கப்பட்டால், “முன்னோர்களின் கட்டுக்கதைகள்” என்று அவர்கள் (பதில்) கூறுகிறார்கள்.

16:25. கியாம நாளில் அவர்கள், தங்கள் (பாவச்) சுமைகளை முழுமையாக சுமக்கட்டும்; மேலும் அறிவில்லாமல் இவர்கள் எவர்களை வழி கெடுத்தார்களோ, அவர்களுடைய (பாவச்) சுமைகளையும் (சுமக்கட்டும்); இவர்கள் (சுமக்கும்) சுமை மிகவும் கெட்டதல்லவா?.

***அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:***

16:25. *மறுமை நாளில் தங்கள் பாவச்சுமையை இவர்கள் சுமப்பதுடன், அறிவின்றி இவர்கள் வழிகெடுத்த மற்றவர்களின் பாவச்சுமையையும் இவர்களே சுமப்பார்கள். (இவ்வாறு இருவரின் பாவச்சுமையை) இவர்களே சுமப்பது மிகக் கெட்டதல்லவா?*

***இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட் (IFT) தமிழாக்கம்:***

16:25. *இவ்வாறு அவர்கள் கூறுவதன் விளைவாக, மறுமைநாளில் தங்களுடைய பாவங்களை முழுமையாகச் சுமப்பதுடன், அறியாமையினால் யார் யாரை இவர்கள் வழிகெடுத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்களுடைய பாவங்களையும் சுமப்பார்கள். பாருங்கள்! எப்படிப்பட்ட மோசமான சுமையை இவர்கள் சுமந்து கொண்டிருக்கின்றார்கள்!*

***பிஜே தமிழாக்கம்:***

25. *கியாமத் நாளில்1 முழுமையாகத் தமது சுமைகளையும், அறிவின்றி யாரை இவர்கள் வழிகெடுத்தார்களோ அவர்களின் சுமைகளையும் சுமப்பதற்காக (இவ்வாறு கூறுகின்றனர்) கவனத்தில் கொள்க! அவர்கள் சுமப்பது மிகவும் கெட்டது.*254

## 3) நியாயத்தீர்ப்பு நாளில் பிறரது சுமையை சுமப்பவர்கள்

*நாம் இரண்டு வகையான குர்-ஆன் வசனங்களை மேலே படித்தோம். குர்-ஆன் சில வசனங்களில் ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமக்கமுடியாது என்றுச் சொல்கிறது. அதே குர்-ஆன் இன்னொரு இடத்தில் (16:25), ஒருவர் இன்னொருவரின் சுமையை சுமப்பார் என்றுச் சொல்கிறது. இது முரண்பாடு அல்லவா?*

*இவ்வசனத்தை புரிந்துக்கொள்வதற்கு இந்த உதாரணத்தை கவனிக்கவும். 'A' என்பவர் இஸ்லாமை ஏற்காத நபர் என்று வைத்துக்கொள்வோம். இவர் இன்னொரு நபர் 'B' என்பவரை தன் பேச்சுக்களால் 'தாவா' செய்து, 'B' இஸ்லாமை தழுவாமல் இருக்கும் படி பார்த்துக்கொண்டார். எனவே, 'B' என்பவர் ஒரு இந்துவாகவோ, கிறிஸ்தவராகவோ அல்லது நாத்தீகராகவோ வாழ்நாள் எல்லாம் வாழ்ந்துவிட்டார். இவ்விருவரும் மரித்துவிடுகிறார்கள். நியாயத்தீர்ப்பு நாளில், அல்லாஹ்வின் மேற்கண்ட வசனத்தின் படி, 'A' என்பவர் தன் பாவ சுமைகளையும் சுமக்கவேண்டும், அதே நேரத்தில் 'B' என்பவரின் சுமைகளையும் சுமக்கவேண்டும்.*

*இதன் படி பார்த்தால், 'A' என்பவர் 'B' என்பவரின் சுமைகளையும் சுமக்கின்றார் என்று அர்த்தமாகின்றதல்லவா? இது ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமப்பதற்கு சமம் தானே!*

*இந்த குர்-ஆன் வசனம் 16:25, குர்-ஆனின் இதர வசனங்களை தகர்த்து விடுகின்றதல்லவா? இவ்விரண்டு விவரங்களும் குர்-ஆனிலிருந்தே வருகின்றன. எவைகளை நாம் ஏற்றுக்கொள்வது? குர்-ஆனின் படி, ஒருவரின் பாவத்தை இன்னொருவர் சுமக்கமுடியுமா? அல்லது முடியாதா? இரண்டிற்கும் குர்-ஆன் 'ஆமாம்' என்று தான் பதில் சொல்கிறது.*

## 4) குர்-ஆனின் எதிரும் புதிரும்

*குர்-ஆன் ஆங்காங்கே முரண்படுவதை மேலே கண்டோம். நம்மையெல்லாம் ஆச்சரியத்தில் ஆழ்த்தும் இன்னொரு உதாரணத்தைப் பாருங்கள். ஒரு வசனத்தில் "ஒருவர் இன்னொருவரின் சுமையை சுமக்கமுடியாது' என்றுச் சொல்லிவிட்டு, அடுத்த வசனத்திலேயே உடனே முரண்படுகின்றது குர்-ஆன்.*

***குர்-ஆன் 29:12,13***

29:12. *நிராகரிப்பவர்கள் நம்பிக்கை கொண்டவர்களிடம்: "நீங்கள் எங்கள் வழியை (மார்க்கத்தைப்) பின்பற்றுங்கள்; உங்கள் குற்றங்களை நாங்கள் சுமந்து கொள்கிறோம்" என்று கூறுகிறார்கள்; ஆனால்,*

அவர்கள் தம் குற்றங்களிலிருந்தும் எதையும் சுமப்பவர்களாக (தாங்குபவர்களாக) இல்லையே! எனவே (உங்கள் குற்றங்களை சுமப்பதற்காகச் சொல்லும்) அவர்கள் நிச்சயமாக பொய்யர்களே!

29:13. ஆனால் நிச்சயமாக அவர்கள் தங்களுடைய (பளுவான பாவச்) சுமைகளையும், தம் (பளுவான பாவச்) சுமைகளுடன் (அவர்கள் வழிகெடுத்தோரின் பளுவான பாவச்) சுமைகளையும் சுமப்பார்கள்; கியாம நாளன்று அவர்கள் இட்டுக்கட்டிக் கொண்டிருந்தவை பற்றி நிச்சயமாக விசாரிக்கப்படுவார்கள்.

12ம் வசனத்தில் 'ஒருவரின் சுமையை இன்னொருவர் விரும்பினாலும் சுமக்கமுடியாது, அப்படிச் சொல்பவர்கள் பொய்யர்கள்' என்று குர்-ஆன் சொல்கிறது. ஆனால், 13ம் வசனத்தில், 'தங்கள் சுமைகளோடு கூட மற்றவர்களின் சுமைகளையும் சுமப்பார்கள்' என்றுச் சொல்லி முரண்படுகின்றது.

**முடிவுரை:** இதுவரை குர்-ஆனிலிருந்து இரண்டு வகையான முரண்பட்ட வசனங்களை வாசித்தோம். ஒருவர் இன்னொருவரின் சுமையை சுமக்கமுடியுமா? என்ற கேள்வியைக் கேட்டால், குர்-ஆன் "முடியாது, ஆனால் முடியும்" என்ற வகையில் பதில் சொல்லியுள்ளது.

அடுத்த பதிவில், இந்த முரண்பட்ட வசனங்களுக்கு திரு பிஜே அவர்கள் தம்முடைய குர்-ஆன் தமிழாக்கத்தின் 254வது விளக்கத்தில் சொல்லியுள்ள பதிலை சிறிது ஆய்வுச் செய்வோம். அதன் பிறகு, குர்-ஆனில் மட்டுமல்ல, ஹதீஸ்களிலும், ஒருவர் இன்னொருவரின் சுமையை சுமக்க அல்லாஹ் கட்டாயப்படுத்திய விவரங்களைக் காண்போம்.

இன்னும் சுமைகள் கூட்டப்படும்...

---


**பக்ரீத் கட்டுரைகள் பக்கம்**

**ரமளான் கட்டுரைகள் பக்கம்**

**உமரின் கட்டுரைகள் பக்கம்**


---

# 3: கியாமத் நாளின் சுமை பரிமாற்றங்கள் பற்றி பிஜே

முன்னுக்கு பின் முரணாக போதிக்கும் குர்-ஆன் வசனங்களை பக்ரீத் தொடரின் **இரண்டாம் பாகத்தில்** ஆய்வு செய்தோம்,

தற்போதைய கட்டுரையில், குர்-ஆன் 16:25ம் வசனத்திற்கு பிஜே அவர்கள் கொடுத்த விளக்கத்தை ஆய்வு செய்வோம்.

## 1) குர்-ஆன் 16:25ம் வசனமும் பிஜேயின் விளக்கமும்.

முஸ்லிம்களை வழிகெடுக்கும் நபர்கள் தங்கள் சுமைகளோடு கூட, அவர்கள் வழிகெடுத்தவர்களின் சுமைகளையும் சுமப்பார்கள் என்று குர்-ஆன் 16:25 & 29:13ல் அல்லாஹ் கூறுகின்றான்.

**பிஜே தமிழாக்கம்**

குர்-ஆன் 16:25 & 29:12,13

16: 25. கியாமத் நாளில்1 முழுமையாகத் தமது சுமைகளையும், அறிவின்றி யாரை இவர்கள் வழிகெடுத்தார்களோ அவர்களின் சுமைகளையும் சுமப்பதற்காக(இவ்வாறு கூறுகின்றனர்) கவனத்தில் கொள்க! அவர்கள் சுமப்பது மிகவும் கெட்டது.254

29:12. "எங்கள் வழியைப் பின்பற்றுங்கள்! உங்கள் தவறுகளை நாங்கள் சுமந்து கொள்கிறோம்" என்று (ஏகஇறைவனை) மறுப்போர் நம்பிக்கை கொண்டோரிடம் கூறுகின்றனர். அவர்களின் குற்றங்களில் எதையும் இவர்கள் சுமப்போராக இல்லை. அவர்கள் பொய்யர்கள்.

29:13. அவர்கள் தமது சுமைகளையும், தமது சுமைகளுடன் வேறு சில சுமைகளையும் சுமப்பார்கள்.254 அவர்கள் இட்டுக்கட்டியது பற்றி கியாமத் நாளில்1 விசாரிக்கப்படுவார்கள்.

இவ்வசனத்தை (16:25) அப்துல் ஹமீது பாகவி அவர்கள் எப்படி தமிழாக்கம் செய்துள்ளார்கள் என்பதை கவனிக்கவும். இவர் அடைப்பிற்குள் "(இவ்வாறு இருவரின் பாவச்சுமையை)" என்று எழுதியவைகள் குர்-ஆனில் இல்லையென்றாலும், அர்த்தம் அப்படித் தான் வருகின்றது, அதாவது அவர்கள் "இருவரின் சுமைகளையும் சுமப்பார்கள்". இஸ்லாமை விட்டு வெளியேறச் செய்கிறவர்களுக்கு இரட்டை தண்டனை கொடுக்கப்படும் என்ற எச்சரிக்கையை அழுத்தம் திருத்தமாக அல்லாஹ் இங்கு கொடுப்பதாக அறிகிறோம்.

***அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:***

16:25. மறுமை நாளில் தங்கள் பாவச்சுமையை இவர்கள் சுமப்பதுடன், அறிவின்றி இவர்கள் வழிகெடுத்த மற்றவர்களின் பாவச்சுமையையும் இவர்களே சுமப்பார்கள். (இவ்வாறு இருவரின் பாவச்சுமையை) இவர்களே சுமப்பது மிகக் கெட்டதல்லவா?

***டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்:***

16:25. கியாம நாளில் அவர்கள், தங்கள் (பாவச்) சுமைகளை முழுமையாக சுமக்கட்டும்; மேலும் அறிவில்லாமல் இவர்கள் எவர்களை வழி கெடுத்தார்களோ, அவர்களுடைய (பாவச்) சுமைகளையும் (சுமக்கட்டும்); இவர்கள் (சுமக்கும்) சுமை மிகவும் கெட்டதல்லவா?.

இப்போது பிஜே அவர்கள் இவ்வசனத்திற்கு கொடுத்த விளக்கம் 254ஐ படிப்போம்.

**254. *பிறரது சுமையைச் சுமக்க முடியுமா?***

*கியாமத் நாளில் முழுமையாகத் தமது சுமைகளையும், அறிவின்றி யாரை இவர்கள் வழிகெடுத்தார்களோ அவர்களின் சுமைகளையும் சுமப்பதற்காக (இவ்வாறு கூறுகின்றனர்) என்று இவ்வசனங்களில் (16:25, 29:13) கூறப்படுகிறது.*

*ஆனால் ஒருவர் சுமையை மற்றவர் சுமக்க மாட்டார் என்று 2:134, 2:141, 2:281, 2:286, 3:25, 3:161, 4:111, 6:31, 6:164, 7:39, 7:96, 9:82, 9:95, 10:8, 10:52, 17:15, 35:18, 39:7, 39:24, 39:48, 39:51, 40:17, 45:22, 52:21, 53:38, 74:38 ஆகிய வசனங்களில் கூறப்பட்டுள்ளது.*

*ஒருவர் மற்றவரின் சுமையைச் சுமக்க மாட்டார் என்பது இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையாகவும் அமைக்கப்பட்டுள்ளது.*

*மேற்கண்ட வசனம் இந்த அடிப்படைக் கொள்கைக்கு எதிரானது என்று கருத முடியாது.*

*ஏனெனில் ஒருவன் பிறரை வழிகெடுத்தால் வழிகெடுக்கப்பட்டவனின் சுமையைச் சுமந்து தான் ஆக வேண்டும். இது பிறர் பாவத்தைச் சுமப்பதல்ல. வழிகெடுத்த பாவத்தைச் சுமப்பது தான்.*

*265வது குறிப்பையும் காண்க!*

மேற்கண்ட விளக்கத்தின் கடைசி பத்தியிலிருந்து உங்களுக்கு ஏதாவது புரிகின்றதா?

- வழிகெடுத்தவன் வழிகெடுக்கப்பட்டவனின் சுமையை சுமந்து தான் ஆகவேண்டும்.
- இது பிறர் பாவத்தைச் சுமப்பதல்ல. வழிகெடுத்த பாவத்தைச் சுமப்பது தான்.

*இந்த இடத்தில் பிஜே அவர்கள் தம் பாணியில் குழப்புவதை காணலாம். இவர் குர்-ஆனின் முரண்பட்ட விவரங்களிலிருந்து அல்லாஹ்வை காப்பாற்ற முயற்சி எடுத்துள்ளார். இந்த முயற்சி வெற்றிப்பெறுமா?*

## 2) வழிகெடுத்த பாவம் யாருடைய கணக்கில் வருகிறது

*பிஜே அவர்கள் தம் குர்-ஆன் விளக்கத்தில் பல விஷயங்களை பக்கம் பக்கமாக விளக்கியுள்ளார். ஆனால், குர்-ஆனின் முரண்பாடு தெளிவாகத் தெரியும் இந்த அடிப்படை வசனத்துக்கு விளக்கம் எழுதும் போது மட்டும், அமைதியாக நான்கு வரிகளை எழுதிவிட்டு, கைகழுவிவிட்டார். குர்-ஆன் 16:25ஐ பற்றியும், 29:12,13 வசனங்கள் பற்றியும் இன்னும் பல விவரங்களை இவர் தெளிவாக விளக்கி இருந்திருக்கலாம். (அடுத்த குர்-ஆன் பதிப்பில் இவ்விளக்க குறிப்பில் இன்னும் பல விவரங்களை பிஜே சேர்ப்பார் அல்லது மொத்தமாக மாற்றி எழுதுவார் என்று எதிர்ப்பார்க்கலாம்).*

***பிஜேயின் விளக்கம்:*** *"ஏனெனில் ஒருவன் பிறரை வழிகெடுத்தால் வழிகெடுக்கப்பட்டவனின் சுமையைச் சுமந்து தான் ஆக வேண்டும். இது பிறர் பாவத்தைச் சுமப்பதல்ல. வழிகெடுத்த பாவத்தைச் சுமப்பது தான்."*

*முதல் வாக்கியத்தை படிக்கும் போது, "வழி கெடுத்தவன், யாரை வழி கெடுத்தானோ அவன் சுமைகளையும் சுமந்துத்தான் ஆகவேண்டும்" என்று பிஜே சொல்கிறார் என்று புரிகின்றது. ஆனால், இரண்டாவது வாக்கியத்தை படிக்கும் போது, "இது பிறர் பாவத்தை சுமப்பது ஆகாது, வழிகெடுத்த பாவத்தை சுமப்பது ஆகும்" என்று முரண்பட்டுச் சொல்கின்றார். இதனை அவர் தெளிவாக மற்றவர்களுக்கு புரியும் படி எழுதியிருக்கலாம்.*

*பிஜே அவர்களின் இந்த விளக்கத்தை நான் எப்படி புரிந்துக்கொண்டேன் என்பதை இப்போது விளக்குகிறேன். என் புரிதல் தவறாக இருந்தால், அதனை முஸ்லிம்கள் ஆதாரங்களோடு சுட்டிக்காட்டலாம்.*

***உதாரணம்:***

*அமர் என்பவன், உஸ்மான் என்பவனை வழி கெடுத்துவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். அதாவது உஸ்மான் இஸ்லாமை புறக்கணிக்கும் படி செய்துவிட்டான். இதன் படி பார்த்தால், அமர் என்பவன் 'வழிகெடுத்த பாவம்' செய்தவன் ஆகின்றான்.*

*கியாமத் நாளில், குர்-ஆனின் படி, அமர் என்பவன் தன் பாவ சுமைகளை சுமக்கவேண்டும், அதோடு கூட, உஸ்மான் என்பவனின் பாவங்களையும் சுமக்கவேண்டும். இதைத் தான் குர்-ஆனும் சொல்கிறது, பிஜே அவர்களும் சொல்கிறார்கள். ஆனால், மக்கள் குர்-ஆனின் முரண்பாட்டை கண்டுக்கொள்ளக்கூடாது என்பதற்காக, தம் விளக்கத்தில் " இது பிறர் பாவத்தைச் சுமப்பதல்ல. வழிகெடுத்த பாவத்தைச் சுமப்பது தான்." என்று எழுதுகிறார். இவரது விளக்கத்தில் "பிறர்" என்று இவர் குறிப்பிடம் இடத்தில் "உஸ்மான்" வரமாட்டானா? ஒருவர் இன்னொருவரின் பாவத்தை சுமக்கிறார் என்றுச் சொன்னாலும், அல்லது ஒருவர் ஓராயிரம் பேர்களின் பாவங்களை சுமக்கிறார் என்றுச் சொன்னாலும், அடிப்படையில் "ஒருவர் இன்னொருவரின் பாவத்தை சுமப்பது" என்ற கோட்பாடு தான்.*

*ஒருவரின் சுமையை எடுத்து அடுத்தவன் மீது போடும் குர்-ஆனின் வசனத்தையும், மற்றும் பிஜே அவர்களின் விளக்கத்தையும் சரியாக புரிந்துக்கொள்ள கீழ்கண்ட அட்டவணை உதவியாக இருக்கும் என்று நினைக்கிறேன்.*

| *அமர்* | *உஸ்மான்* |
|---|---|
| 1. இஸ்லாமை புறக்கணித்த பாவம் *(காஃபிர்)* | 1. இஸ்லாமை புறக்கணித்த பாவம் *(அமரின் தாவாவினால், இஸ்லாமை புறக்கணித்தான்)* |
| 2. இதர பாவங்கள் | 2. இதர பாவங்கள் |
| 3. உஸ்மானை வழிகெடுத்த பாவம் | |

*அமரின் 100% சதவிகித சுமையை மூன்று வகையாக பிரிக்கலாம்.*

- ***முதலாவது சுமை*** - *இஸ்லாமை புறக்கணித்த பாவம் (காஃபிர்)*
- ***இரண்டாவது சுமை*** - *'இதர பொதுவான பாவங்கள்'*
- ***மூன்றாவது சுமை*** - *'உஸ்மானை வழிகெடுத்த பாவம்' ஆகும். பொதுவாக நாம் கவனித்தால், இந்த பாவமும் 'அமரின் பட்டியலிலேயே' சேர்க்கப்படும். இதை அவன் சுமந்தே ஆக வேண்டும்.*

*குர்-ஆன் 16:25 & 29:13ன் படி, அமர் தன் 100% சுமையை (3 வகையான சுமையை) சுமக்கவேண்டும். அதோடு கூட, உஸ்மான் இஸ்லாமை விட்டு வெளியேறும் படி அமர் செய்தபடியினால், உஸ்மானின் பாவங்களையும் சுமக்கவேண்டும் (மேற்கண்ட அட்டவணையை பார்க்கவும்).*

*குர்-ஆனின் படி, கியாமத் நாளில் மேற்கண்ட அட்டவணை இப்படியாக மாறிவிடும். உஸ்மானின் சுமைகள் அமரின் பட்டியலோடு சேர்ந்துவிடும். இதைத் தான் குர்-ஆன் தெளிவாகச் சொல்கிறது, மற்றும் பிஜே அவர்களின் விளக்கமும் மழுப்பி சொல்கிறது.*

| *அமர்* | *உஸ்மான்* |
|---|---|
| 1. *இஸ்லாமை புறக்கணித்த பாவம் (காஃபிர்)* | *இவரது 2 சுமைகள் அமரின் பட்டியலில் சேர்ந்துவிட்டது)* |
| 2. *இதர பாவங்கள்* | |
| 3. *உஸ்மானை வழிகெடுத்த பாவம்* | |
| 4. *உஸ்மான் - இஸ்லாமை புறக்கணித்த பாவம் (அமரின் தாவாவினால், இஸ்லாமை புறக்கணித்தான்)* | |
| 5. *உஸ்மானின் இதர பாவங்கள்* | |

***பல கோடி மதிப்பு பெரும் கேள்வி:*** *மேற்கண்ட பட்டியலை கவனிக்கும் போது, உஸ்மானின் சுமைகள் அனைத்தும் அமரின் பட்டியலில் (முதுகில்) சுமத்தப்படுவதினால், உஸ்மானின் பட்டியல் சுமைகளில்லாத சுத்தப்பட்டியலாக மாறிவிடுகின்றது. ஆக, குர்-ஆனின் படி பார்த்தால், கியாமத் நாளில், உஸ்மானிடம் ஒரு பாவமும் இல்லாதபடியினால், அவனை அல்லாஹ் சொர்க்கத்திற்கு அனுப்பவேண்டும்? இது உண்மையா? இதற்கு முஸ்லிம்கள் தான் பதில் சொல்லவேண்டும்.*

*"இல்லை இல்லை, உஸ்மானின் பாவங்கள் அவனோடு கூட இருக்கும், அவன் இஸ்லாமை புறக்கணித்தபடியால், அவன் நரகத்திற்குச் செல்வான்" என்று முஸ்லிம்கள் சொன்னால், குர்-ஆனின் வசனங்கள் சொல்லும் விவரங்கள் அனைத்தும் பொய் என்று நீங்கள் சொல்வதாக அமையும்.*

***அப்துல் ஹமீது பாகவி தமிழாக்கம்:***

*16:25. மறுமை நாளில் தங்கள் பாவச்சுமையை இவர்கள் சுமப்பதுடன், அறிவின்றி இவர்கள் வழிகெடுத்த மற்றவர்களின் பாவச்சுமையையும் இவர்களே சுமப்பார்கள். (இவ்வாறு இருவரின் பாவச்சுமையை) இவர்களே சுமப்பது மிகக் கெட்டதல்லவா?*

*இருவரின் பாவங்கள் சுமப்பது மிகவும் கெட்டது என்று குர்-ஆன் சொல்கிறது. உஸ்மானை வழிகெடுத்த பாவத்தை அமர் சுமப்பது உண்மையானால், உஸ்மானை விடுதலை செய்வது தானே சரியானதாக இருக்கும்! முஸ்லிம்களே! மேற்கொண்டு ஆய்வு செய்து உங்கள் முடிவைச் சொல்லுங்கள்.*

***முடிவுரை:***

இந்த தொடரில், பிஜே அவர்களின் விளக்கத்தை ஆய்வு செய்தோம், ஆனால், அவரது விளக்கத்தில் சரியான தெளிவு இல்லை. குர்-ஆன் தெளிவாக சொல்லும் ஒரு வசனத்துக்கு குழப்பம் வரும்படி பிஜே அவர்கள் விளக்கம் கொடுத்துள்ளார்கள். எனினும், குர்-ஆனின் முரண்பாட்டை மறைப்பதற்காக, பிஜே எடுத்த முயற்சி தோல்வி அடைந்துவிட்டது. பிஜே அவர்கள் என்ன தான் முயற்சி எடுத்தாலும், "ஒருவரின் பாவத்தை இன்னொருவர்" சுமக்கமுடியும், கியாமத் நாளில் அதனை நானே செய்வேன் என்று அல்லாஹ் அழுத்தமாகச் சொல்லுவது இவரால் மறைக்கமுடியவில்லை.

குர்-ஆன் சொல்வது உண்மையென்று நாம் நம்பினால், வழிகெடுக்கப்பட்டவனின் சுமைகள் இடமாற்றம் செய்யப்படுவதால், அவன் சொர்க்கத்திற்கு தகுதியானவனாக மாறுகின்றான். கியாமத் நாளின் சுமை இடமாற்றத்தில் இப்படிப்பட்ட அனேக சிக்கல்கள் உள்ளன. அவைகளை முஸ்லிம்கள் தீர்த்துவைப்பார்கள் என்று நாம் எதிர்ப்பார்க்கலாம்.

அடுத்த தொடரில், அல்லாஹ் எப்படி ஒருவரின் சுமையை எடுத்து இன்னொருவரின் முதுகின் மீது சுமத்திவிடுகின்றார் என்பதை ஹதீஸ்களின் உதவி கொண்டு பார்ப்போம். மேலும், யாருடைய சுமையை அவன் இடமாற்றம் செய்கின்றானோ, அந்த மனிதன் சொர்க்கத்திற்கு தகுதியானவனாக மாறிவிடுகின்றான். இரட்டை சுமைகள் சுமக்கப்பட்டவன் நரகம் செல்கின்றான். இதன் படி பார்த்தால், மேற்கண்ட உதாரணத்தில் கண்ட உஸ்மான், அல்லாஹ்வினால் சொர்க்கத்திற்கு அனுமதிக்கப்படவேண்டும்.

---


[பக்ரீத் கட்டுரைகள் பக்கம்]

[ரமளான் கட்டுரைகள் பக்கம்]

[உமரின் கட்டுரைகள் பக்கம்]


---

# 4: முஸ்லிம்களின் மலைபோன்ற பாவசுமைகளை சுமக்கும் யூத கிறிஸ்தவர்கள்

முந்தைய தொடர் கட்டுரைகளை கீழ்கண்ட தொடுப்புக்களில் படிக்கலாம்:


1. அல்லாஹ்விற்கு ஏன் பலியும் இரத்தமும் தேவைப்பட்டது?
2. ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமக்கமுடியாது ஆனால் முடியும் – குர்-ஆனின் குழப்பம்
3. கியாமத் நாளின் சுமை பரிமாற்றங்கள் பற்றி பிஜே


தற்போதைய கட்டுரையில், அல்லாஹ் எப்படி ஒரு பிரிவு மக்களின் பாவசுமைகளை எடுத்து, இன்னொரு பிரிவு மக்களின் மீது சுமத்துகிறார் என்பதை ஹதீஸ்களின் உதவியுடன் காண்போம். முதல் பிரிவின் மலைபோன்ற சுமைகள் இடமாற்றம் செய்யப்பட்டபடியினால், அவர்களை அல்லாஹ் சொர்க்கத்தில் அனுமதிக்கிறார். இந்த விவரம் சிலருக்கு ஆச்சரியமாக இருக்கும்.

## 1) முஸ்லிம்களின் பாவசுமைகளை டவுன்லோட் செய்து, யூத கிறிஸ்தவர்கள் மீது அப்லோட் செய்யும் அல்லாஹ்

***அ) முஸ்லிம்களின் பாவங்களை சுமக்கும் யூத கிறிஸ்தவர்கள்:***

*மறுமை நாளில் முஸ்லிம்களில் சிலர் மலைகளைப் போன்ற பாவங்களுடன் வருவார்களாம். அந்த மலைபோன்ற பாவசுமைகளை முஸ்லிம்களிடமிருந்து எடுத்து, அவைகளை யூதர்கள் மீதும் கிறித்தவர்கள் மீதும் வைத்து, அல்லாஹ் அந்த முஸ்லிம்களை சொர்க்கத்தில் அனுமதிப்பானாம்.*

***சஹீஹ் முஸ்லிம் நூல், எண்:5344***

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் முஸ்லிம்களில் சிலர் மலைகளைப் போன்ற பாவங்களுடன் வருவார்கள். ஆனால், அவற்றை அவர்களுக்கு அல்லாஹ் மன்னித்துவிட்டு, யூதர்கள் மீதும் கிறித்தவர்கள் மீதும் அவற்றை வைத்துவிடுவான். இவ்வாறே நான் கருதுகிறேன். இதை அபூமூசா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூரவ்ஹ் ஹரமீ பின் உமாரா (ரஹ்) அவர்கள், "இவ்வாறே நான் கருதுகிறேன் எனும் ஐயப்பாட்டைத் தெரிவித்த அறிவிப்பாளர் யார் என்பது எனக்குத் தெரியவில்லை" என்று கூறுகிறார்கள்.*

*அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்து இதைச் செவியுற்ற (அவர்களுடைய புதல்வரான) அபூபுர்தா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஹதீஸை நான் (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தபோது அவர்கள், "இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்தா உம்முடைய தந்தை அறிவித்துள்ளார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு நான் "ஆம்" என்றேன்.* Book :49

***ஆ) முஸ்லிம்களை நரகத்திலிருந்து விடுவிக்கும் யூத கிறிஸ்தவ இரட்சகர்கள்:***

*மறுமை நாளில் ஒவ்வொரு முஸ்லிமிடம் அல்லாஹ் ஒரு யூதனையோ, அல்லது கிறிஸ்தவனையோ கொண்டு வந்து, "இவன் தான் உன்னை நரகத்திலிருந்து விடுவித்தான்" என்று சொல்லுவானாம். என்னே! ஒரு பாக்கியம் முஸ்லிம்களுக்கு! நீங்கள் எப்படிப்பட்ட பாவங்களை பூமியில் செய்தாலும், அவைகள் மலைபோன்று காணப்பட்டாலும், உங்களுக்கு பிரச்சனையே இல்லை, ஏனென்றால், கியாமத் நாளில் உங்களை விடுவிக்கும் யூத மற்றும் கிறிஸ்தவ இரட்சகர்கள் இருக்கிறார்களே!*

***சஹீஹ் முஸ்லிம் நூல், எண்:5342***

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ் மறுமை நாளில் ஒவ்வொரு முஸ்லிமிடமும் ஒரு யூதரையோ அல்லது கிறித்தவரையோ ஒப்படைத்து, "இவன்தான் உன்னை நரகத்திலிருந்து விடுவித்தான்" என்று சொல்வான். இதை அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.* Book :49

***இ) முஸ்லிம்களின் ஸ்தானத்தில் நரகத்திற்குச் செல்லும் யூத கிறிஸ்தவர்கள்***

*ஒரு முஸ்லிம் மரிக்கும் போது, அவருக்கு நரகம் நிச்சயமாக கிடைக்குமாம். ஆனால், அந்த முஸ்லிமுக்காக அல்லாஹ்வினால் ஆயத்தமாக்கப்பட்ட நரகத்தின் இடத்திற்கு, அந்த முஸ்லிமை அனுப்பாமல், அந்த இடத்திற்கு ஒரு யூதனையோ, கிறிஸ்தவனையோ அல்லாஹ் அனுப்பிவிடுவானாம். இதன் மூலமாக, அந்த முஸ்லிம் சொர்க்கம் செல்வானாம் . ஆனால், அந்த யூதன் அல்லது கிறிஸ்தவன், முஸ்லிமின் நரக டிக்கெட்டை எடுத்துக்கொண்டு, நரகத்திற்குச் சென்று வேதனையை அனுபவிப்பானாம். இது தான் இஸ்லாம் சொல்லும் நரக இறையியல்.*

***சஹீஹ் முஸ்லிம் நூல், எண்:5343***

*அவ்ன் பின் அப்தில்லாஹ் (ரஹ்), சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) ஆகியோர் கூறியதாவது:*

*"ஒரு முஸ்லிமான மனிதர் இறக்கும்போது நரகத்தில் அவரது இடத்திற்கு யூதர் ஒருவரையோ கிறித்தவர் ஒருவரையோ அல்லாஹ் அனுப்பாமல் இருப்பதில்லை" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக (தம் தந்தை) அபூமூசா (ரலி) அவர்கள் கூறினார்கள் என அபூபுர்தா (ரஹ்) அவர்கள் (கலீஃபா) உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களிடம் அறிவித்தார்கள்.*

*அப்போது உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள், "எவனைத் தவிர வேறு இறைவனில்லையோ அ(ந்த ஏக இறை)வன் மீது சத்தியமாக! இதை உம்முடைய தந்தை (அபூமூசா (ரலி) அவர்கள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதாக உம்மிடம் கூறினார்களா?" என்று மூன்று முறை கேட்டார்கள். அபூபுர்தா (ரஹ்) அவர்கள், அவ்வாறே சத்தியமிட்டுக் கூறினார்கள்.*

*இதன் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:*

*உமர் பின் அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் அபூபுர்தா (ரஹ்) அவர்களைச் சத்தியமிட்டுக் கூறச் சொன்னதாக சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) அவர்கள் என்னிடம் அறிவிக்கவில்லை. ஆனால், அவ்ன் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அவ்வாறு அறிவித்தபோது, அதற்கு சயீத் பின் அபீபுர்தா (ரஹ்) அவர்கள் மறுப்புத் தெரிவிக்கவில்லை. - மேற்கண்ட ஹதீஸ் அபூமூசா (ரலி) அவர்களிடமிருந்தே மேலும் இரு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.* Book :49

***ஈ) பெரும் கொடிய பாவங்களை செய்த முஸ்லிம்களின் சுமையை சுமக்கும் யூத கிறிஸ்தவர்கள்.***

*நாம் பார்க்கப்போகும் அடுத்த விவரம் "ஹதீஸ் குத்ஸி" என்ற பிரிவைச் சேர்ந்தது. குத்ஸி என்றால் பரிசுத்தமானது என்று அர்த்தம். ஹதீஸ் தொகுப்புகளில், 'அல்லாஹ் பேசுவதாக இருக்கும் ஹதீஸ்களை' இஸ்லாமிய அறிஞர்கள் பரிசுத்தமான ஹதீஸ்கள் என்று வகை பிரிக்கின்றனர், இதைப் பற்றி இஸ்லாமிய தளங்களில் நீங்கள் படிக்கலாம். தற்போது நாம் பார்க்கும் விவரம், ஒருவரின் பாவத்தை இன்னொருவர் சுமப்பது பற்றியதாகும். இந்த ஹதீஸ் ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்து கீழே கொடுத்துள்ளேன்.*

*அபூ மூஸா அறிவித்தது.*

*அல்லாஹ்வின் தூதர் சொன்னதாவது: உயிர்த்தெழுதலின் நாளில், என் உம்மா (முஸ்லிம்கள்) மூன்று பிரிவுகளாக பிரிக்கப்படுவார்கள். ஒரு பிரிவு முஸ்லிம்கள், அவர்களின் செயல்களுக்கான எந்த கணக்கு வழக்கு கொடுக்கப்படாமல், சொர்க்கத்துக்குள் அனுமதிக்கப்படுவார்கள். இரண்டாவது பிரிவு முஸ்லிம்கள், தங்கள் செயல்களுக்காக சிறிய அளவில் கணக்கு கேட்கப்பட்டு, சொர்க்கத்துக்குள் அனுமதிக்கப்படுவார்கள். ஆனால், மூன்றாவது பிரிவு முஸ்லிம்கள், தங்கள் முதுகுகளில் பெரிய மலைகள் அளவு பாவ சுமைகளை சுமந்தவர்களாக வருவார்கள். அல்லாஹ்விற்கு எல்லாம் தெரிந்திருந்தும், இவர்கள் யார் என்று அல்லாஹ் தூதர்களிடம் கேட்பான். அவர்கள், "இவர்கள் உன்னுடைய தாழ்மையான அடியார்கள் என்று" பதில் சொல்வார்கள். அதற்கு அல்லாஹ், "இவர்களிடமிருந்து அந்த பாவசுமைகளை எடுத்து, அவைகளை அப்படியே யூத கிறிஸ்தவர்கள் மீது வையுங்கள்" என்றுச் சொல்லுவான். மேலும், என்னுடைய அருளால், அந்த முஸ்லிம்களை சொர்க்கத்துக்கு அனுப்புங்கள் என்றும் சொல்லுவான்.*

Narrated Abu Musa: Allah's Messenger said: On the Day of Resurrection, my Ummah (nation) will be gathered into three groups. One sort will enter Paradise without rendering an account (of their deeds). Another sort will be reckoned an easy account and admitted into Paradise. Yet another sort will come bearing on their backs heaps of sins like great mountains. Allah will ask the angels though He knows best about them: Who are these people? They will reply: They are humble slaves of yours. He will say: Unload the sins from them and put the same over the Jews and Christians: then let the humble slaves get into Paradise by virtue of My Mercy.

(This Hadith IS SOUND and mentioned in Mustadrak of Hakim). (110 Hadith Qudsi (Sacred Hadith), translated by Syed Masood-ul-Hasan, revision and commentaries by Ibrahim m. Kunna [Darussalam Publishers and Distributors], pp. 19-20;

*மிகப்பெரிய கொடிய பாவங்களைச் செய்த முஸ்லிம்களின் பாவசுமைகளை எடுத்து, யூத கிறிஸ்தவர்களின் மீது அல்லாஹ் சுமத்துவானாம்.*

## 2) ஹதீஸ் முஸ்லிம் எண்கள்: 5344, 5342 & 5343, மற்றும் ஹதீஸ் குத்ஸி - சிறிய ஆய்வு

*நாம் முந்தைய தொடர்களில் ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமப்பது பற்றிய இஸ்லாமிய கோட்பாடுகளை பார்த்தோம்.*

***முதலாவதாக,** ஆபிரகாமின் மகன் விஷயத்தில், அவருக்கு பதிலாக அல்லாஹ் ஒரு ஆட்டை பலியாக்கி அவரை மீட்டார் என்பதை குர்ஆனிலிருந்து பார்த்தோம். **இரண்டாவதாக,** முஸ்லிம்களை வழிகெடுக்கும் மக்கள் மீது, அந்த வழிகெடுக்கப்பட்டவர்களின் பாவங்களையும் அல்லாஹ் சுமத்துவதை குர்ஆனிலிருந்து பார்த்தோம். **மூன்றாவதாக,** சஹீஹ் என்று முஸ்லிம்கள் கருதும் ஹதீஸிலிருந்து இன்னொரு*

உதாரணத்தையும் இப்போது பார்த்துள்ளோம். அதாவது மறுமை நாளில் முஸ்லிம்களின் இரட்சகர்களாக யூதர்களும் கிறிஸ்தவர்களும் இருப்பார்கள்.

மேற்கண்ட ஹதீஸ்கள் ஒரே விஷயத்தை பலவகையாகச் சொல்கிறது. இவைகளை படிக்கும் போது நமக்கு கீழ்கண்ட கேள்விகள் எழுகின்றன! இவைகள் நியாயமான கேள்விகளா? இல்லையா? என்பதை முஸ்லிம்கள் ஆய்வு செய்து பதில் சொல்லட்டும்:

1) மறுமை நாளில், முஸ்லிம்கள் மலைபோன்ற பாவசுமைகளோடு அல்லாஹ்விற்கு முன்பு நின்றால் ஒரு உண்மையான இறைவன் என்ன செய்யவேண்டும்? நீதியான தீர்ப்பு வழங்கவேண்டும். ஆனால், இந்த ஹதீஸ்களில் அல்லாஹ் ஒரு அநியாயமானவனாக காணப்படுகின்றான்.

2) அல்லாஹ் நிகரற்ற அன்புடையோனாக இருந்தால், முஸ்லிம்களை மன்னித்துவிட்டு அவர்களை நேரடியாக சொர்க்கத்திற்கு அனுப்பியிருக்கவேண்டும், அதை விட்டுவிட்டு, முஸ்லிம்களின் பாவசுமையை அப்படியே யூத கிறிஸ்தவர்கள் மீது சுமத்துவது ஏன்? இதிலிருந்து என்ன தெரிகின்றது? மறுமை நாளில், ஒருவரின் பாவத்தை வெறும் வாயால் 'மன்னித்துவிட்டேன், சொர்க்கத்திற்கு போய் சுகித்திரு' என்று அல்லாஹ்வால் சொல்லமுடியவில்லை. முஸ்லிம்களின் சுமையை இன்னொருவரின் மீது சுமத்தினால் தவிர, அவர்களுக்கு சொர்க்கத்திற்கு இடமில்லை என்று சொல்வது போல செயல்படுகிறான் அல்லாஹ்.

3) இதே கேள்வி தான், ஆபிரகாமின் மகன் விஷயத்திலும் நாம் கேட்டோம். ஆபிரகாமின் மகனை ஒரு மகத்தான பலியைக் கொண்டு அல்லாஹ் மீட்டுக்கொண்டானாம். ஒருவரை மீட்க அல்லாஹ்விற்கு ஏன் ஒரு மகத்தான பலி தேவைப்பட்டது? முஸ்லிம்களை மறுமை நாளில் மீட்கும் மகத்தான பலியாக யூத கிறிஸ்தவர்கள் ஏன் இருக்கவேண்டும்? ஒருவருக்கு பதிலாக இன்னொருவரை நியமிக்காமல் (பாவ சுமைகளை மாற்றம் செய்யாமல்) அல்லாஹ்வால் முஸ்லிம்களை சொர்க்கத்திற்கு அனுப்ப முடியாதா? முஸ்லிம்களே சிந்தியுங்கள்.

4) "ஒரு முஸ்லிமான மனிதர் இறக்கும்போது நரகத்தில் அவரது இடத்திற்கு யூதர் ஒருவரையோ கிறித்தவர் ஒருவரையோ அல்லாஹ் அனுப்பாமல் இருப்பதில்லை" என்பது தான் முஹம்மதுவின் கூற்று! இது என்ன கூத்து? பிறக்கும் ஒவ்வொரு முஸ்லிமும் நரகத்திற்குத் தான் செல்வார் என்று அல்லாஹ் ஏற்கனவே முடிவு செய்துவிட்டானாம்! அப்படியானால், நாங்கள் சொர்க்கத்திற்குச் செல்வோம் என்ற நம்பிக்கையில் வாழும் முஸ்லிம்களின் நிலை 'ஐயோ பரிதாபம்' தானா?

5) "எங்களுக்குத் தான் அல்லாஹ் ஒரு யூதனையோ கிறிஸ்தவனையோ இரட்சகனாக கொடுத்து சொர்க்கம் அனுப்புவாரே!" என்று பெருமிதத்தோடு மார்தட்டுகின்றீர்களா முஸ்லிம்களே! உங்களை நேசிக்காமல், ஒவ்வொரு முஸ்லிமும் நரகத்திற்குத் தான் செல்லவேண்டும் என்று முடிவு செய்த அல்லாஹ்வை எப்படி இன்னமும் நம்புகிறீர்கள்? ஒவ்வொரு முஸ்லிமுக்கும் ஒரு யூத/கிறிஸ்தவன் இரட்சகனாக மறுமை நாளில் கொடுக்கப்படுவான் என்றுச் சொன்னால், ஜனத்தொகை கணக்கு சரியாக இருக்கின்றதா? என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

6) அதிகமாக தாவா செய்து, அனேக கிறிஸ்தவர்களை நீங்கள் முஸ்லிமாக மாற்றிவிட்டால், கிறிஸ்தவர்களாக இருப்பவர்களின் ஜனத்தொகை குறைந்துவிடும். அப்படியானால், உங்களுக்கு மறுமை நாளில் நரகத்திலிருந்து காப்பாற்ற இரட்சகர்கள் (கிறிஸ்தவர்கள்) இல்லாமல் போய்விடுவார்கள். எச்சரிக்கை! எச்சரிக்கை! கணக்கு புரியுதா?

7) இந்த வரிகளை படிக்கும் நீங்கள் ஒரு முஸ்லிமாக இருந்தால், மறுமை நாளில் உங்களின் கணக்கு வரும் போது அல்லாஹ் உங்களிடம், 'தம்பி என்னிடம் யூத கிறிஸ்தவர்கள் ஸ்டாக் (இருப்பு) இல்லை, எனவே, மலைபோல இருக்கும் உன் பாவசுமைகளை மாற்றுவதற்கு என்னால் முடியாது, உன் சுமைகளை நீயே சுமந்துக்கொள், நீ நேரடியாக நரகத்திற்குச் சென்றுவிடு என்று சொன்னால் என்ன செய்வீர்கள்?' இஸ்லாமிய லாகிக் எங்கேயோ இடிக்கிறதே!

## 3) அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையோன் ஏன் இப்படி ஜாதிவெறி பிடித்து அலைகின்றான்

யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் அல்லாஹ் நேசிப்பதில்லை என்பது மாத்திரமல்ல, முஸ்லிம்கள் செய்யும் பாவங்களுக்காக யூதகிறிஸ்தவர்களை தண்டிக்கிறார் என்பது மிகவும ஆச்சரியமான விஷயமாகும்.

1. முஸ்லிம்கள் செய்யும் பாவங்களுக்காக ஏன் யூதர்கள் தண்டிக்கப்படவேண்டும்?

2. ஏன் கிறிஸ்தவர்கள் முஸ்லிம்களுக்கு தரப்படவேண்டிய தண்டனையை ஏற்றுக்கொள்ளவேண்டும்?

3. சஹீஹ் முஸ்லிம் ஹதீஸ் எண் 5342ன் படி, ஒவ்வொரு கிறிஸ்தவனும் ஒரு முஸ்லிமை நரகத்திலிருந்து காப்பாற்றுவான். இதன் படி, நான் ஒரு முஸ்லிமை நரகத்திலிருந்து காப்பேன். இந்த கட்டுரையை படிக்கும் கிறிஸ்தவ சகோதர சகோதரியே, நீங்களும் ஒரு முஸ்லிமை நரகத்திலிருந்து காப்பாற்றுவீர்கள். என்னே ஒரு பாக்கியம் பாருங்கள்! (யாருக்கு? முஸ்லிம்களுக்கா? கிறிஸ்தவர்களுக்கா?)

4. குத்ஸி ஹதீஸின் படி, கொடிய பாவங்கள் செய்யும் முஸ்லிம்களின் பாவங்களை எடுத்து, யூத கிறிஸ்தவர்கள் மீது வைப்பது அநியாயமில்லையா?

5. ஜாதி வெறி பிடித்த மனிதர்களைப் பார்த்து இருக்கிறோம், ஆனால், இங்கே ஜாதி வெறி பிடித்த இறைவனைப் பார்க்கிறோம்.

6. முஸ்லிம்கள் பலவீனர்களாக இருந்து, பெரிய மலைபோல பாவங்கள் செய்வார்கள் என்று தெரிந்திருந்த அல்லாஹ்விற்கு, அவர்கள் மன்னிப்பு கேட்கும் போது, அவர்களை மன்னித்துவிட்டு, சொர்க்கத்திற்கு அனுப்பலாமே! ஏன் அவன் யூத கிறிஸ்தவர்களை முஸ்லிம்களின் பலவீனத்துக்காக தண்டிக்கிறார்? இது தான் அளவற்ற அருளாளன் என்பதன் அர்த்தமா? நிகரற்ற அன்புடையோன் என்பதன் அர்த்தம் இது தானா?

7. கடைசியாக, யூத கிறிஸ்தவர்கள் முஸ்லிம்களை நரகத்திலிருந்து காக்கும் மகத்தான பலிகளாக கருதப்படமுடியுமென்றால், உலக மக்களின் மகத்தான பலியாக ஏன் இயேசு இருக்கமுடியாது?

**முடிவுரை:**

இந்த தொடரில் ஹதீஸ்களின் படி ஒருவரின் பாவத்தை மற்றொருவர் எப்படி சுமக்கிறார் என்பதை விளக்கினேன். குர்-ஆனின் படி, ஒருவனை இன்னொருவன் வழிகெடுத்தால் அவனது பாவசுமைகளையும் வழிகெடுத்தவனே சுமக்கவேண்டும். ஆனால், நாம் பார்த்த ஹதீஸ்களின் படி, முஸ்லிம்களை வழிகெடுக்காத யூத கிறிஸ்தவர்கள் மீது, பாவம் செய்த முஸ்லிம்களின் பாவ சுமையை சுமத்துவதில் என்ன நியாயம் இருக்கிறது? முஸ்லிம் பொய் சொல்லுவான், கற்பழிப்பான், ஏமாற்றுவான், எல்லாவிதமான பாவங்களைச் செய்து மலைபோல பெருக்கிக்கொள்வான், ஆனால் கியாமத் நாளில் அவைகளை கிறிஸ்தவன் சுமக்கவேண்டும் – என்னே இஸ்லாமிய கோட்பாடு!

குர்-ஆனின் படியும், ஹதீஸ்களின் படியும், அல்லாஹ் விரும்பினால், ஒருவரின் பாவத்தை இன்னொருவர் சுமக்கும் படி செய்யமுடியும். "சுமக்கமுடியும்" என்பதல்ல, அல்லாஹ் சுமக்கும் படி செய்வான். எனவே, ஒருவரின் பாவத்தை இன்னொருவர் சுமப்பது இஸ்லாமில் இல்லை என்று முஸ்லிம்கள் சொன்னால், அவர்களுக்கு இஸ்லாம் தெரியாது என்று அர்த்தம், அல்லது அவர்கள் பொய் சொல்கிறார்கள் என்று அர்த்தம்.

இதே தலைப்பில், இன்னும் சில விவரங்களை அடுத்த தொடரில் காண்போம்.

**அடிக்குறிப்புக்கள்:**

1) இக்கட்டுரையில் பயன்படுத்திய ஹதீஸ்கள் பற்றி சகோ. சாம் ஷமான் மற்றும் சகோ. டேவிட் உட் அவர்களின் வீடியோ விளக்கம் - **யூடியூப்**

[பக்ரீத் கட்டுரைகள் பக்கம்](#)

[ரமளான் கட்டுரைகள் பக்கம்](#)

[உமரின் கட்டுரைகள் பக்கம்](#)

---

## 5: *மனிதனால் கூடாதது தான், ஆனால் அல்லாஹ்வால் எல்லாம் கூடும்*

[*கிறிஸ்தவத்திலிருந்து இஸ்லாமை தழுவிய உமரின் தம்பி, சௌதி அரேபியாவிலிருந்து தொலைபேசியில் உமரோடு பேசுகின்றான். 2016ம் ஆண்டின் பக்ரீத் தொடர் கட்டுரைகள் பற்றிய சில முக்கியமான கேள்விகளை கேட்கிறான். பக்ரீத் முந்தைய கட்டுரைகளை படிக்கவும்:* **பாகம் 1**, **பாகம் 2**, **பாகம் 3**, **பாகம் 4**]

## மனிதனால் கூடாதது தான், ஆனால் அல்லாஹ்வால் எல்லாம் கூடும்

***தம்பி:*** *ஹலோ… அண்ணா, அஸ்ஸலாமு அலைக்கும்*

***உமர்:*** *ஹலோ தம்பி, வஅலைக்கும் ஸலாம். என்ன ஆச்சரியம்! பக்ரீத் பண்டிகைக்கு முன்பாக தம்பியிடமிருந்து போன் வந்திருக்கு!*

***தம்பி:*** *உங்களுடைய பக்ரீத் தொடர்களை படித்தேன், உங்களுக்கு ஒரு விவரத்தை தெளிவுப்படுத்த விரும்பி போன் செய்தேன். நீங்க, ஃபிரியாக இருக்கீங்களா?*

***உமர்:*** *ரொம்ப நல்ல விஷயம் தான். நான் உனக்காக என் நேரத்தை ஃபிரீயாக்கிக் கொள்கிறேன். நீ பேசு.*

***தம்பி:*** *ஒருவரின் சுமைகள் இன்னொருவர் சுமப்பது பற்றிய விஷயத்தில் குர்-ஆனில் முரண்பாடு உள்ளது என்று நீங்கள் குற்றம் சாட்டியுள்ளீர்கள். இது உண்மையல்ல என்பதை உங்களுக்கு சொல்லவே நான் போன் செய்தேன்.*

***உமர்:*** *குர்-ஆன் ஒரு இடத்தில் ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமக்கமுடியாது என்றுச் சொல்கிறது (குர்-ஆன்* 6:164, 17:15, 35:18, 39:7 & 53:38),

*வேறு இடத்தில், ஒருவர் இன்னொருவரின் பாவசுமையை கியாமத் நாளில் சுமப்பார் என்றுச் சொல்கிறது (குர்-ஆன்* 16:24,25, 29:13). *இது முரண்பாடு இல்லையா?*

***தம்பி:*** *இங்கு தான் நீங்கள், குழம்பியிருக்கிறீர்கள்.*

***உமர்:*** *அப்படியா! கொஞ்சம் தெளிவாக விளக்கு பார்க்கலாம்.*

***தம்பி:*** *நீங்க குர-ஆன் வசனங்கள்* 16:24, 25 *மற்றும்* 29:12,13*ஐ தவறாக புரிந்துக்கொண்டீர்கள். கவனிக்கவேண்டிய முக்கியமானவைகளை நீங்கள் கவனிக்கவில்லை. இப்போது குர்-ஆன்* 29:12,13 *வசனங்களை படிப்போம்.*

29:12. *நிராகரிப்பவர்கள் நம்பிக்கை கொண்டவர்களிடம்: "நீங்கள் எங்கள் வழியை (மார்க்கத்தைப்) பின்பற்றுங்கள்; உங்கள் குற்றங்களை நாங்கள் சுமந்து கொள்கிறோம்" என்று கூறுகிறார்கள்; ஆனால், அவர்கள் தம் குற்றங்களிலிருந்தும் எதையும் சுமப்பவர்களாக (தாங்குபவர்களாக) இல்லையே! எனவே (உங்கள் குற்றங்களை சுமப்பதற்காகச் சொல்லும்) அவர்கள் நிச்சயமாக பொய்யர்களே!*

29:13. *ஆனால் நிச்சயமாக அவர்கள் தங்களுடைய (பளுவான பாவச்) சுமைகளையும், தம் (பளுவான பாவச்) சுமைகளுடன் (அவர்கள் வழிகெடுத்தோரின் பளுவான பாவச்) சுமைகளையும் சுமப்பார்கள்; கியாம

*நாளன்று அவர்கள் இட்டுக்கட்டிக் கொண்டிருந்தவை பற்றி நிச்சயமாக விசாரிக்கப்படுவார்கள். (டாக்டர். முஹம்மது ஜான் தமிழாக்கம்)*

***உமர்:*** *இவ்வசனங்களில் நான் எவைகளை பார்க்க தவறினேன்?*

***தம்பி:*** *12ம் வசனத்தை நன்றாக கவனியுங்கள். ஒரு (பாவியான) மனிதன் இன்னொரு மனிதனிடம் சென்று, உன்னுடைய சுமைகளை நான் சுமந்துக்கொள்கிறேன் என்றுச் சொல்வது பொய்யாகும் என்றுச் சொல்கிறது. அதாவது, மனிதர்களுக்கு மற்றவர்களின் பாவசுமைகளை எடுத்து தங்கள் மீது வைத்துக்கொண்டு அவைகளை சுமக்கும் அதிகாரம் இல்லை என்பதை இந்த வசனம் சொல்கிறது. ஆனால், இதே வேலையை இறைவன் விரும்பினால் செய்யமுடியும், இதனை 13ம் வசனத்தில் பார்க்கமுடியும். இந்த 13ம் வசனத்தில், அல்லாஹ் ஒருவரின் சுமையை எடுத்து இன்னொருவரின் மீது சுமத்துகின்றான். இது அவனுக்கு இருக்கும் அதிகாரமாகும், அவன் நினைத்தால் எதையும் செய்யமுடியும். இது இதர வசனங்களுக்கு முரண்படவில்லை.*

*சுருக்கமாகச் சொல்வதானால், நீங்கள் குறிப்பிட்ட குர்-ஆன் வசனங்கள் (குர்-ஆன் 6:164, 17:15, 35:18, 39:7 & 53:38) சொல்வது என்னவென்றால், ஒருவரின் சுமையை இன்னொரு மனிதன் விரும்பினாலும் சுமக்கமுடியாது, ஏனென்றால், மற்றவர்களின் சுமையை சுமக்கும் உரிமையோ, அதிகாரமோ மனிதர்களுக்கு இல்லை என்பதாகும்.*

*ஆனால், நீங்கள் முரண்பாடு என்றுச் சொல்லும் வசனங்கள் (குர்-ஆன் 16:24,25, 29:13) குறிப்பிடுவது என்னவென்றால், மனிதர்களால் மற்றவரக்ளின் சுமைகளை சுமப்பது முடியாதது தான், ஆனால், அல்லாஹ் விரும்பினால் ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமக்க வைக்கமுடியும் என்பதாகும்.*

*ஆக, மனிதர்களால் முடியாதது அல்லாஹ்வால் முடியும். இது முரண்பாடு அல்ல. இப்போது புரிந்ததா உங்களுக்கு?*

***உமர்:*** *தம்பி, நீ அருமையாக சிந்தித்திருக்கின்றாய்! வெரிகுட்.*

***தம்பி:*** *என்ன வெரிகுட்? குர்-ஆனில் முரண்பாடு இல்லை என்று ஒப்புக்கொள்கின்றீர்களா இல்லையா? இன்னும் ஏதாவது விளக்கம் தேவையா?*

***உமர்:*** *பழம் நழுவி பாலில் விழுந்த கதையாக அல்லவா இருக்கிறது உன் பதில்!*

***தம்பி:*** *எனக்கு புரியவில்லையே!*

***உமர்:*** *உன்னுடைய விளக்கத்தின் படி, மற்றவர்களின் சுமையை சுமந்துக்கொள்ள மனிதனுக்கு உரிமை இல்லை, ஆனால் ஒருவரின் சுமையை எடுத்து அடுத்தவன் மீது வைக்க அல்லாஹ்விற்கு உரிமையுண்டு. இது தான் சுருக்கம்.*

***தம்பி:*** *ஆமாம், சரியாக கேட்ச் செய்தீங்க.*

***உமர்:*** *குர்-ஆனின் கோட்பாடு இது தான் என்றுச் சொன்னால், ஏன் நீங்கள் கிறிஸ்தவ கோட்பாட்டை எதிர்க்கிறீர்கள்?*

***தம்பி:*** *இஸ்லாமின் கோட்பாடு வேறு, கிறிஸ்தவம் சொல்வது வேறு.*

***இஸ்லாமிய கோட்பாடு*** *– ஒரு மனிதன் மற்றொரு மனிதனின் சுமைகளை சுமக்கும்படிச் செய்ய அல்லாஹ்வால் முடியும்.*

***கிறிஸ்தவ கோட்பாடு*** *– ஒரு மனிதனால் (இயேசு) மற்றொரு மனிதனின் சுமைகளை சுமக்க அதிகாரம் உண்டு என்று நம்புவது.*

***உமர்:*** *நீ கிறிஸ்தவ கோட்பாட்டை தவறாக புரிந்துக்கொண்டு இருக்கிறாய். "இயேசு ஒரு மனிதன்" என்று நம்பினால், நீ சொல்வது போல நாம் நினைக்கலாம். ஆனால், இயேசு இறைவனாவார், எனவே இறைவனால், எதையும் செய்யமுடியும்.*

*இறைவனால், ஒருவரின் சுமையை எடுத்து அடுத்தவனின் மீது சுமத்த முடியும் (இஸ்லாம் சொல்வது போல), அதே நேரத்தில் மக்களின் சுமைகளை தானே சுமக்கவும் முடியும் (கிறிஸ்தவம் சொல்வது போல).*

*ஆக, மனிதர்களால் கூடாதது தான், ஆனால், தேவனால் எல்லாம் கூடும்.*

***தம்பி:*** *இறைவனால் எல்லாம் கூடும், இதனை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், இயேசு இறைவனல்ல, அவர் ஒரு மனிதனாவார். அப்படியானால், ஒரு மனிதனால் எப்படி இன்னொருவரின் சுமையை சுமக்க முடியும்?*

***உமர்:*** *இயேசு இறைவனா மனிதனா? என்பது வேறு ஒரு தலைப்பில் நாம் விவாதிக்கவேண்டிய விஷயம். தற்போதைய விவாதம் என்ன? ஒருவர் எப்படி இன்னொருவரின் சுமையை சுமக்கமுடியும் என்பதாகும். இந்த உரையாடலின் மூலமாக நாம் இருவரும் ஒப்புக்கொண்ட விவரம் என்ன? இஸ்லாமிய கோட்பாடும், கிறிஸ்தவ கோட்பாடும் ஒத்துப்போகின்ற விஷயம் என்னவென்றால், 'இறைவன் விரும்பினால், அவனால் எல்லாம் கூடும்' என்பதாகும்.*

***இதன் படி பார்த்தால்:***

- *இறைவன் (அல்லாஹ்), ஒருவரின் சுமையை இன்னொருவரின் மீது சுமத்துகிறான்.*
- *இறைவன் (இயேசு), இன்னொருவரின் சுமையை தன் மீது சுமத்திக்கொண்டார்.*

*மேற்கண்ட இரண்டும் ஒன்று தான், மேலும் இறைவனுக்கு இது சாத்தியமானது தான்.*

***தம்பி:*** *உண்மையாகவே எனக்கு குழப்பமாக இருக்கிறது.*

***உமர்:*** *தம்பி, இங்கு குழப்பமடைவதற்கு ஒன்றுமில்லை. இறைவனால் எல்லாம் கூடும் என்று நீ சொன்னாய். அதனை நான் ஆமோதித்தேன் அவ்வளவு தான்.*

*கிறிஸ்தவ கோட்பாட்டின் படியும், ஒரு பாவியான மனிதன் இன்னொரு மனிதனின் சுமையை நான் சுமந்துக்கொள்ளுவேன், கியாமத் நாளன்று நான் காப்பாற்றுவேன் என்று சொல்லமுடியாது. இதையே குர்-ஆனும் சொல்கிறது (குர்-ஆன்* 29:12).

*ஆனால், தேவன் தன் விருப்பத்தின் படி, மனிதர்களின் மீது வைத்த அன்பினால், பூமியில் மனிதனாக வந்து, யாருடைய கட்டாயமும் இல்லாமல், மனிதர்களின் சுமைகளை சுமந்துக்கொண்டார். ஒட்டுமொத்த மனித சமுதாயத்தை பாவசுமைகளிலிருந்து விடுதலை செய்தார். அவருடைய இச்செயலை நம்புபவர்களுக்கு கியாமத் நாளில் நியாயத்தீர்ப்பு இல்லை.*

*மேற்கண்ட இரண்டு விவரங்களும், குர்-ஆனுக்கு எதிராக இருக்கிறது என்றுச் சொல்லமுடியாது. இறைவனால் எல்லாம் கூடும் என்பது தானே இஸ்லாமின் நம்பிக்கை!*

***தம்பி:*** *ம்ம்ம்... நாம் எங்கு ஆரம்பித்தோம்... எங்கு வந்து முடித்தோம். பாவ சுமைகள் சுமப்பது பற்றி வசனங்களில் குர்-ஆனில் முரண்பாடு இல்லை என்பதை தெரிவிக்க நான் போன் செய்தேன்.*

***உமர்:*** *நாம் கண்ட குர்-ஆன் வசனங்களில் முரண்பாடு இல்லை என்று நீ சொல்வதானால், கிறிஸ்தவ கோட்பாட்டை நீ அங்கீகரிக்கவேண்டும். அல்லாஹ், மனிதர்களின் சுமைகளை இடமாற்றம் செய்ய அதிகாரம் படைத்தவன் என்று நம்பினால், அதே அல்லாஹ், மக்களின் சுமைகளை தன் மீது ஏற்றுக்கொண்டு அவர்களை விடுதலைச் செய்யவும் அதிகாரம் படைத்தவன் என்று நம்புவது தான் சரியானதாகும்.*

***தம்பி:*** சும்மா சொல்லக்கூடாது, உங்களிடம் ஏதோ விசேஷித்த ஒன்று இருக்கிறது.

***உமர்:*** என்னிடம் ஒன்றுமில்லை தம்பி, நான் நம்பும் கோட்பாடு அப்படிப்பட்டது. நீ தலைகீழாக கேள்விகள் கேட்டாலும், அதனிடம் பதில் இருக்கிறது.

***தம்பி:*** கடைசியாக, ''சுமைகள் பற்றிய வசனங்களில்'' குர்-ஆனில் முரண்பாடு இல்லை என்று ஒப்புக்கொண்டீர்கள் என்று நம்புகிறேன்.

***உமர்:*** அப்படியானால், இயேசு நம் பாவ சுமைகளை சுமந்துக்கொண்டது, குர்-ஆனில் ஒப்புக்கொள்ளப்பட்ட கோட்பாடு தான் என்று நீயும் ஒப்புக்கொண்டாய் என்று நம்புகிறேன்.

***தம்பி:*** அதெப்படி ஒப்புக்கொள்ளமுடியும்?

***உமர்:*** தம்பி, மீசைக்கும் ஆசை கூழுக்கும் ஆசை என்றுச் சொன்னால் முடியாது. ஏதாவது ஒன்றை தெரிவு செய். மறந்தே போயிட்டேன், ஆபிரகாமின் மகனை பலியிட்ட விஷயம் பற்றி நான் எழுதியது பற்றி நீ ஒன்றுமே கேட்கவில்லையே!

***தம்பி:*** வேண்டாம்.. வேண்டாம்.. எனக்கு இப்போது நேரமில்லை, நான் கூழ் குடிக்க போகனும். ச்சே... உங்களோடு சேர்ந்து நானும் 'கூழ்' என்று சொல்லிக்கொண்டு இருக்கிறேன். நான் போனை வைக்கிறேன், பிறகு பேசலாம். குட்பை.

***உமர்:*** குட்பை.

---

***பக்ரீத் கட்டுரைகள் பக்கம்***

***ரமளான் கட்டுரைகள் பக்கம்***

***உமரின் கட்டுரைகள் பக்கம்***

# 6: அகீகா – ஒரு உயிருக்காக இன்னொரு உயிர் கொல்லப்படுவது ஏன்?

(2016 பக்ரீத் தொடரின் முந்தைய கட்டுரைகளை படிக்க இங்கு சொடுக்கவும்).

இந்த கட்டுரையில், ஒரு உயிருக்காக இன்னொரு உயிர் பலிகொடுக்கப்படும் இஸ்லாமிய கோட்பாட்டைப் பற்றி சுருக்கமாக காண்போம்.

## 1) அகீகா என்றால் என்ன?

ஒரு இஸ்லாமிய தளம், அகீகா என்பதற்கு கீழ்கண்ட விளக்கத்தை தருகின்றது.

***இதனை மொழி நடையில்:*** *வெட்டுதல் அல்லது இரத்தத்தை ஓட்டுதல் எனப்படும்.*

***பரிபாசையில்:*** *குழந்தை பிறந்து ஏழாவது நாள் இறைவனுக்கு நன்றி செலுத்தும் முகமாக அறுக்கப்படும் அல்லது அறுத்துக் கொடுக்கப்படும் ஆட்டுக்குச் சொல்லப்படும். [1]*

இஸ்லாம் கல்வி தளம் கொடுக்கும் விளக்கம்:

***குழந்தையும் அகீகாவும்:***

*அகீகா என்றால் குழந்தைக்காக ஆட்டை அறுத்து குர்பான் கொடுப்பதாகும்.*

*"குழந்தையானது அதன் அகீகாவுடன் அடைமானம் வைக்கப் பட்டுள்ளது.குழந்தை பிறந்து ஏழாவது நாளில் ஆடு அறுக்கப்படும், குழந்தைக்கு பெயர் சூட்டப் படும், அதன் தலை முடி களையப்படும்". திர்மிதி 1442.*

*குழந்தைப் பிறந்து ஏழாவது நாளில் அகீகா கொடுக்க வேண்டும். ஆண் குழந்தையாக இருந்தால் இரண்டு ஆடுகளும்,பெண் குழந்தையாக இருந்தால் ஒரு ஆடும் கொடுக்க வேண்டும். ஏழாம் நாள் அகீகா கொடுக்க வசதியில்லா விட்டால், பிறகு கொடுக்க தேவை இல்லை. [2]*

***ஆன்லைன் பிஜே தளத்தின் விளக்கம்:***

*"ஒவ்வொரு குழந்தையும் தன்னுடைய **அகீகாவிற்கு அடைமானமாக இருக்கிறது.** தனது ஏழாவது நாளில் தனக்காக (ஆடு) அறுக்கப்பட்டு, அந்தக் குழந்தையின் தலை முடிஇறக்கப்பட்டு, பெயர் வைக்கப்படும்" என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள்கூறினார்கள்.*

*அறிவிப்பவர்: ஸம்ரத் பின் ஜுன்துப் (ரலி)*

*நூல்: நஸயீ 4149*

*இந்த ஹதீஸின் அடிப்படையில் குழந்தை பிறந்த ஏழாவது நாளில் ஆடு அறுத்துப்பலியிட வேண்டும். அதே நாளில் குழந்தைக்குப் பெயரிட்டு, தலை முடியைக் களையவேண்டும். அகீகா தொடர்பாக வரக் கூடிய செய்திகளில் ஏழாவது நாள் கொடுக்க வேண்டும் என்று இடம் பெறும் செய்தி மட்டுமே ஆதாரப்பூர்வமாக உள்ளது.[3]*

*மேற்கண்ட விளக்கங்கள், அகீகா என்றால் என்னவென்பதை சுருக்கமாக விளக்கிவிட்டது, எனவே இதைப் பற்றி மேற்கொண்டு விளக்கத்தேவையில்லை.*

## 2) ஒவ்வொரு குழந்தையும் தன்னுடைய அகீகாவிற்கு அடைமானம்

*பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும், தன்னுடைய அகீகாவிற்கு அடைமானமாம். எனவே, ஒரு ஆட்டை அறுத்து, அதன் இரத்தத்தை சிந்தவிட்டு, அந்த குழந்தையை மீட்கவேண்டும். இதன் அடிப்படையில் தான் அகீகா கொடுக்கப்படுகின்றது.*

- ***ஒரு உயிருக்காக ஏன் ஒரு ஆடு பலியாகவேண்டும்?***
- ***இந்த அகீகா மூலமாக அல்லாஹ் என்ன சொல்லவருகிறான்?***

*குழைந்தைக்காக ஒரு ஆட்டை பலியிடும் இந்த வழக்கம், முஹம்மதுவிற்கு முன்பாகவே அரேபியர்களிடம் இருந்தது, அதனை சிறிது மாற்றி முஹம்மது முஸ்லிம்களுக்கு கட்டளையாக கொடுத்துள்ளார். இந்த பழக்கம் இஸ்லாம் கொண்டுவந்த புதிய பழக்கமல்ல என்பது இதன் மூலம் அறியமுடிகின்றது.*

*பிறக்கும் குழந்தை அடைமானம் என்றுச் சொன்னால், யாரிடம் அந்த குழந்தை அடைமானம் வைக்கப்பட்டது? யாரிடமிருந்து அந்த குழந்தையை (அடைமானத்தை) மீட்கவேண்டும்? ஏன் மீட்கவேண்டும்? அந்த அடைமானத்தை மீட்க பணத்தை தானதர்மமாக அல்லாஹ்வின் பெயரில் கொடுத்தால், அது அந்த அடைமானத்தை மீட்க போதுமானதாக இருக்காதா? ஏன் ஒரு மிருகத்தை உயிருக்கு உயிர் என்ற பெயரில் அறுத்து, இரத்தம் ஓடவைக்கவேண்டும்?*

*இப்படி பல கேள்விகளை நாம் முஸ்லிம்களிடம் கேட்கவேண்டியுள்ளது.*

## 3) ஆபிரகாமின் மகனை பலி மூலம் மீட்டுக்கொண்டதும், அகீகாவும் ஒன்றா?

இந்த பக்ரீத் தொடரின் முதலாவது பாகத்தில், ஆபிரகாமின் மகனை மீட்கும் படி, அல்லாஹ் ஒரு ஆட்டை பகரமாக பலியிட்டார் என்பதைக் கண்டோம். இதனை குர்-ஆன் 37:102-107வரையிள்ள வசனங்களில் காணலாம்.

**குர்-ஆன் 37:102-107**

37:102. பின் (அம்மகன்) அவருடன் நடமாடக்கூடிய (வயதை அடைந்த) போது அவர் கூறினார்: "என்னருமை மகனே! நான் உன்னை அறுத்து பலியிடுவதாக நிச்சயமாகக் கனவு கண்டேன். இதைப்பற்றி உம் கருத்து என்ன என்பதைச் சிந்திப்பீராக!" (மகன்) கூறினான்; "என்னருமைத் தந்தையே! நீங்கள் ஏவப்பட்டபடியே செய்யுங்கள். அல்லாஹ் நாடினால் - என்னை நீங்கள் பொறுமையாளர்களில் நின்றுமுள்ளவனாகவே காண்பீர்கள்." 37:103. ஆகவே, அவ்விருவரும் (இறைவன் கட்டளைக்கு) முற்றிலும் வழிப்பட்டு, (இப்ராஹீம்) மகனைப் பலியிட முகம் குப்புறக்கிடத்திய போது.

37:104. நாம் அவரை "யா இப்ராஹீம்!" என்றழைத்தோம். 37:105. "திடமாக நீர் (கண்ட) கனவை மெய்ப்படுத்தினீர். நிச்சயமாக நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே கூலி கொடுத்திருக்கிறோம்.

37:106. "நிச்சயமாக இது தெளிவான ஒரு பெருஞ் சோதனையாகும்."37:107. **ஆயினும், நாம் ஒரு மகத்தான பலியைக் கொண்டு அவருக்குப் பகரமாக்கினோம்.**(முஹம்மது ஜான் தமிழாக்கம்).

இங்கு 107ம் வசனத்தை கவனித்தால், அகீகாவைப் போன்று, அல்லாஹ் ஆபிரகாமின் மகனை (அடைமானத்தை) மீட்க ஒரு ஆட்டை பகரமாக கொடுத்தார் என்பதை காணமுடியும்.

இறைவனை திருப்திபடுத்த, மனிதர்கள் நற்செயல்களைச் செய்யவேண்டும் என்றுச் சொல்வது, ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருக்கிறது. ஆனால், இறைவனை திருப்திபடுத்த மனிதன் ஏன் ஒரு மிருகத்தை கொலை செய்யவேண்டும்? அதன் இரத்தத்தை சிந்த வேண்டும்? பிறக்கும் குழந்தைகள் ஏன் அடைமானமாக அல்லாஹ்வால் கருதப்படுகின்றது? ஆபிரகாமின் மகனை ஏன் அல்லாஹ் மீட்கவேண்டும்? அதற்காக ஏன் ஒரு ஆட்டை பலியிடவேண்டும்? போன்ற கேள்விகளுக்கு முஸ்லிம்களால் பதில் சொல்லமுடிவதில்லை.

"எங்கள் நபி அகீகா கொடுக்கச்சொன்னார் நாங்கள் செய்கிறோம்" என்ற பதில், நாம் கேட்ட கேள்விக்கான பதிலாக அமையவில்லை. பலியிடும் படி உங்கள் நபி சொல்லட்டும், அல்லது அல்லாஹ் சொல்லட்டும், கேள்வி என்னவென்றால், "ஏன் மிருகம் பலியிடப்படவேண்டும்?" என்பதாகும், யார் கட்டளையிட்டார்கள் என்பதல்ல.

- ஆபேல் அல்லாஹ்விற்கு ஒரு மிருகத்தை காணிக்கையாக பலியிட்டான் - ஏன்?
- ஆபிரகாமின் மகனை மீட்க, ஒரு மிருகம் பலியிடப்பட்டது - ஏன்?
- பிறக்கும் குழந்தையை அடைமானத்திலிருந்து மீட்க ஆடுகள் பலியிடப்படுகின்றன- ஏன்?

ஒரு உயிரை மீட்க இன்னொரு உயிர் பலியிடப்படுகின்றது என்பதைப் பார்க்கிறோம், ஏன் இப்படி? என்பது தான் கேள்வி. மனிதன் அல்லாஹ்விற்கு கீழ்படிந்து தொழுதுக்கொள்வது போதாதா? நல்ல செயல்களைச் செய்வது போதாதா? மற்றவர்களிடம் நீதி நேர்மையாக நடந்துக்கொள்வது போதாதா? தங்கள் வாழ்க்கையை பரிசுத்தமாக காத்துக்கொள்வது போதாதா? ஏன் ஒரு மிருகத்தின் இரத்தம் அல்லாஹ்விற்காக சிந்தப்படவேண்டும்?

இக்கேள்விகளுக்கு பதில் இஸ்லாமில் இல்லை. ஒருவேளை, முந்தைய வேதங்களில் இக்கேள்விகளுக்கான பதில் காணப்படுமா?

## 4) யூத வேதங்களில் 'அகீகா' அல்லது பிள்ளையை மீட்க செலுத்தப்படும் பலி

*இந்த தொடர் கட்டுரைகளில் நான் கேட்ட அனைத்து கேள்விகளுக்கும் பைபிளில் பதில் உள்ளது. ஆனால், தற்போது நாம் பைபிளிலிருந்து 'அகீகா'விற்கு ஒத்து இருக்கின்ற, ஒரு விஷயத்தை மட்டும் இங்கு காண்போம் [4]. மற்ற பலிகள் பற்றிய விவரங்கள் தேவைப்பட்டால் இதர கட்டுரைகளில் காண்போம்.*

1) *யூதர்களில் முதலாவதாக பிறக்கும் ஆண்பிள்ளைகளும், மிருக ஜீவன்களில் முதலாவதாக பிறப்பவைகளும் கர்த்தருக்கு சொந்தமானவர்கள். எனவே அவர்களை மீட்டுக்கொள்ளவேண்டும்.*

2) *ஏன் இந்த கட்டளையென்று பார்த்தால், இஸ்ரேல் மக்களை எகிப்திலிருந்து மீட்டுக்கொண்டு வருவதற்கு, பார்வோனிடம் காட்டப்பட்ட கடைசி அற்புதம், எகிப்தில் இருக்கும் அனைத்தின் தலைப்பிள்ளைகள் சங்கரிக்கப்பட்டதாகும். ஆனால், யூதர்களின் தலைப்பிள்ளைகளை, மிருக ஜீவன்களின் தலைப்பிள்ளைகளை கர்த்தர் தனக்கென்று ஏற்படுத்திக்கொண்டு அவர்களை காப்பாற்றினார்.*

3) *இதன் ஞாபகமாக, யூதர்கள் தங்கள் ஆண் தலைப்பிள்ளைகளை பிறந்த எட்டாம் நாளிலே, ஒரு ஆட்டைக்கொண்டு மீட்டுக்கொள்ளவேண்டும்.*

4) *ஒரு உயிருக்காக இன்னொரு உயிர் பலியிட்டு, அந்த பிள்ளையை கர்த்தரிடமிருந்து மீட்டுக்கொள்ளவேண்டும்.*

## முடிவுரை:

*பைபிளில் பலிகள் செலுத்துவது பற்றி அனேக விவரங்கள் உள்ளன. பாவ நிவாரண பலி, சர்வாங்க தகனபலி என்று பல பலிகள் பற்றி பைபிள் குறிப்பிடுகின்றது. கிறிஸ்தவ இறையியலின் படி, இவைகள் அனைத்தும் இயேசுவைக் குறிக்கும். ஆனால், இயேசுவின் தியாக பலியை (குர்பானியை) மறுக்கும் முஸ்லிம்கள், சில பலிகளை இன்னும் அறியாமையில் செலுத்திக்கொண்டே இருக்கிறார்கள். ஒரு உயிரை அடைமானத்திலிருந்து (அகீகா) மீட்டுக்கொள்ள இன்னொரு உயிரை(ஆடுகளை) பலியிடுகிறார்கள். அல்லாஹ் கூட ஆபிரகாமின் மகனை மீட்டுக்கொள்ள (யாரிடமிருந்து?), ஒரு ஆட்டை பலியிட்டு, அது ஒரு மகத்தான பலி என்று குர்-ஆனில் சொல்லிக்காட்டுகின்றான். மிருகங்களின் இரத்தமும், மாமிசமும் அல்லாஹ்வைச் சேராது என்று ஒரு புறம் சொல்லிக்கொண்டு, இன்னொரு புறம் மிருகங்களின் இரத்தம் சிந்தப்பட இஸ்லாம் கட்டளையிடுகின்றது. இது இஸ்லாமின் முரண்பாடு என்பதா? அல்லது அறியாமையென்பதா? இயேசுக் கிறிஸ்து சமாரிய பெண்ணிடம் அன்று சொன்னது போல, இன்று முஸ்லிம்களிடம் சொல்லவேண்டி வருகிறது:*

*நீங்கள் அறியாததைத் தொழுது கொள்ளுகிறீர்கள்; நாங்கள் அறிந்திருக்கிறதைத் தொழுது கொள்ளுகிறோம்; ஏனென்றால் இரட்சிப்பு யூதர்கள் வழியாய் வருகிறது. (யோவான் 4:22)*

*எல்லா முஸ்லிம்களுக்கும் தியாகத் திருநாள் நல்வாழ்த்துக்கள்.*

*அடுத்த தொடரில் சந்திப்போம்...*

---

***அடிக்குறிப்புக்கள்:***

[1] **aasirsalafi.blogspot.in/2012/03/01.html**

[2] **www.islamkalvi.com**

[3] **www.onlinepj.com/egathuvam/2006-ega/ega_mar_2006**

[4] *தலைப்பிள்ளைகளை மீட்டுக்கொள்வது ஏன்?*

***அ) பார்வோனுக்கு தண்டனை***

*யாத்திராகமம் 11:4 அப்பொழுது மோசே: கர்த்தர் நடுராத்திரியிலே நான் எகிப்தின் மத்தியில் புறப்பட்டுப்போவேன்.*

*யாத் 11:5 அப்பொழுது சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கும் பார்வோனுடைய தலைப்பிள்ளைமுதல் ஏந்திரம் அரைக்கும் அடிமைப்பெண்ணுடைய தலைப்பிள்ளைவரைக்கும், எகிப்து தேசத்திலிருக்கிற முதற்பேறனைத்தும் மிருகஜீவன்களின் தலையீற்றனைத்தும் சாகும் என்று உரைக்கிறார் என்று சொன்னதுமன்றி,*

***ஆ) கர்த்தருக்கு பரிசுத்தமாகும் முதற்பிறப்பு***

*யாத் 13:1 கர்த்தர் மோசேயை நோக்கி:*

*யாத் 13:2 இஸ்ரவேல் புத்திரருக்குள் மனிதரிலும் மிருகஜீவன்களிலும் கர்ப்பந்திறந்து பிறக்கிற முதற்பேறனைத்தையும் எனக்குப் பரிசுத்தப்படுத்து; அது என்னுடையது என்றார்.*

***இ) ஏன் இதனை செய்யவேண்டும்? எதிர் கால சந்ததியின் கேள்வியும், யூதர்கள் சொல்லவேண்டிய பதிலும்***

*யாத் 13:11 மேலும், கர்த்தர் உனக்கும் உன் பிதாக்களுக்கும் ஆணையிட்டபடியே, உன்னைக் கானானியரின் தேசத்திலே வரப்பண்ணி, அதை உனக்குக் கொடுக்கும்போது,*

*யாத் 13:12 கர்ப்பந்திறந்து பிறக்கும் அனைத்தையும், உனக்கு இருக்கும் மிருகஜீவன்களின் தலையீற்றனைத்தையும், கர்த்தருக்கு ஒப்புக்கொடுப்பாயாக; அவைகளிலுள்ள ஆண்கள் கர்த்தருடையவைகள்.*

*யாத் 13:13 கழுதையின் தலையீற்றையெல்லாம் ஒரு ஆட்டுக்குட்டியால் மீட்டுக்கொள்வாயாக; மீட்காவிட்டால், அதின் கழுத்தை முறித்துப்போடு. உன் பிள்ளைகளில் முதற்பேறான சகல நரஜீவனையும் மீட்டுக்கொள்வாயாக.*

*யாத் 13:14 பிற்காலத்தில் உன் குமாரன்: இது என்ன என்று உன்னைக் கேட்டால்; நீ அவனை நோக்கி: கர்த்தர் எங்களைப் பலத்த கையினால் அடிமைத்தன வீடாகிய எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்.*

*யாத் 13:15 எங்களை விடாதபடிக்கு, பார்வோன் கடினப்பட்டிருக்கும்போது, கர்த்தர் எகிப்து தேசத்தில் மனிதரின் தலைப்பிள்ளைகள்முதல் மிருகஜீவன்களின் தலையீற்றுகள்வரைக்கும் உண்டாயிருந்த முதற்பேறுகள் யாவையும் கொன்று போட்டார்; ஆகையால், கர்ப்பந்திறந்து பிறக்கும் ஆணையெல்லாம் நான் கர்த்தருக்குப் பலியிட்டு, என் பிள்ளைகளில் முதற்பேறனைத்தையும் மீட்டுக்கொள்ளுகிறேன்.*

*யாத் 13:16 கர்த்தர் எங்களைப் பலத்த கையினால் எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதற்கு, இது உன் கையில் அடையாளமாகவும், உன் கண்களின் நடுவே ஞாபகக்குறியாகவும் இருக்கக்கடவது என்று சொல்வாயாக என்றான்.*

---

***பக்ரீத் கட்டுரைகள் பக்கம்***

***ரமளான் கட்டுரைகள் பக்கம்***

***உமரின் கட்டுரைகள் பக்கம்***

---

# 7: அல்லாஹ்வின் குர்பானி, குர்பானி & குர்பானி

(2016 பக்ரீத் தொடரின் முந்தைய கட்டுரைகளை இந்த தொடுப்பில் படிக்கலாம்)

*இந்த தொடரில் "குர்பானி" என்ற முக்கியமான சொற்றொடர் பற்றியும், இதற்கும் ஒருவரின் சுமையை இன்னொருவர் சுமப்பதற்கும் என்ன ஒற்றுமையுள்ளது என்பதைப் பற்றியும் சிறிது ஆய்வு செய்வோம்.*

*குர்பானி என்ற சொல்லிற்கு "தியாகம் செய்தல்" என்றும், "எந்தச் செயலைக் கொண்டு ஒருவரை (அல்லாஹ்வை) நெருங்க முடியுமோ அச்செயல்" என்றும் பொருள் கூறுகிறார்கள்.*

Qurbāni (Arabic: قربانى) (or أضحية Udhiyyah as referred to in Islamic Law) is the sacrifice of a livestock animal during Eid al-Adha. The word is related to the Hebrew qorbān "offering" and Syriac qurbānā "sacrifice", etymologised through the cognate Arabic triliteral as "a way or means of approaching someone" or "nearness". [1] *விக்கிபீடியா*

*பொதுவாக பக்ரீத் பண்டிகையன்று பிராணிகளை பலியிடுவதை குர்பானி என்று முஸ்லிம்கள் சொல்வார்கள். குர்பானி பற்றிய அருமை பெருமைகளை முஸ்லிம்களிடம் கேட்டால், மணிக்கணக்கில் விளக்குவார்கள். குர்பானியாக பலியிடப்படும் பிராணியின் ஒவ்வொரு ரோமமும் (முடியும்), குர்பானி கொடுக்கும் நபருக்கு கியாமநாளில் நன்மைகளாக கருதப்படுமாம்.*

## 1) அல்லாஹ்வை நெருங்க எப்படி குர்பானி உதவி புரியும்?

*ஒருவரை நெருங்க எந்த செயல் உதவியாக இருக்குமோ, அதனை குர்பானி என்றுச் சொல்வார்கள். ஒரு மிருகத்தை அறுத்து, அதன் இரத்தத்தை பூமியில் ஓடச்செய்வது எப்படி ஒரு முஸ்லிம் அல்லாஹ்வை நெருங்க உதவியாக இருக்கும்?*

*திர்மிதி மற்றும் இப்னு மாஜா என்ற ஹதீஸ் தொகுப்புகளில், கீழ்கண்ட விவரம் கொடுக்கப்பட்டுள்ளது.*

*துல்ஹஜ் மாதம் பத்தாம் நாளன்று அடியார்கள் செய்யும் அமல்களில் குர்பானியை அறுத்து இரத்தத்தை ஓட்டுவதை விட அல்லாஹ்விற்கு மிகப்பிரியமான அமல் வேறொன்றும் இல்லை. நிச்சயமாக அவை கியாமநாளில் தங்களின் கொம்புகளுடனும், உரோமங்களுடனும், குளம்புகளுடனும் வரும்; நிச்சயமாக குர்பானிக் கொடுக்கப்படும் கால்நடைகளின் இரத்தம் பூமியில் விழுவதற்கு முன் அல்லாஹ்வின் அங்கீகாரத்தை அக்குர்பானி பெற்று விடுகிறது. எனவே அதனை மனமுவந்துச் செய்யுங்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.*

*அறிவிப்பவர்-அன்னை ஆயிஷா(ரலி), திர்மிதி-*180, *இப்னு மாஜா-*233 ***மூலம்***

*பக்ரீத் பண்டிகை நாளன்று, முஸ்லிம்கள் செய்யும் செயல்களில், அல்லாஹ்விற்கு மிகவும் பிடித்த செயல், குர்பானி பிராணியை அறுத்து இரத்தத்தை ஓட்டுவதாகுமாம். மேலும், அதே மேற்கண்ட கட்டுரையில், குர்பானிக்கு பதிலாக பணத்தை ஏழைகளுக்கு தானதர்மம் செய்தால் அது குற்றமிழைப்பதற்கு சமமாகுமாம்.*

***குர்பானிக்கு பகரமாக சதகா:***

*குர்பானிக்கு கடமையானவர்கள் ஆடு, மாடு, ஒட்டகம் இவைகளை அறுத்து இரத்தத்தை ஓட்டுவது அவசியமாகும். இதற்கு மாறாக குர்பானி மிருகங்களில் விலையை சதகாவாக, தானதர்மமாக ஏழைகளுக்கு கொடுத்தால் குர்பானி கடமை நிறைவேறாது. இப்படிச் செய்பவர் குற்றமிழைத்தவராக ஆகிவிடுவார்.* ***மூலம்***

## "குர்பானியின் சட்டங்கள்" என்ற புத்தகத்தில் கீழ்கண்ட விதமாக கூறப்பட்டுள்ளது:

*அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெறுவதற்காக நாம் தொழுகை நோன்பு தர்மம் போன்ற வணக்கங்களை அதிக ஆர்வத்துடன் செய்து வருகிறோம். அல்லாஹ்விடத்தில் நம்மை நெருக்கமாக்கி வைக்கும் இது போன்ற வணக்கங்களில் குர்பானியும் ஒன்றாகும்.*

***மேற்கண்ட விவரங்களின் அடிப்படையில் முஸ்லிம்களிடம் சில கேள்விகள் கேட்கவேண்டும்:***

*அ) ஒரு மிருகத்தின் மரணம் எப்படி முஸ்லிம்களை அல்லாஹ்விடம் நெருங்கச் செய்யும்? குர்-ஆன் 22:37ன்படி, இறையச்சம் தான் அல்லாஹ்வைச் சேரும் என்றால், ஒரு மிருகத்தை ஏன் கொல்லவேண்டும்?*

*ஆ) நற்செயல்கள் நம்மை இறைவனிடம் நெருங்கச் செய்யும் என்றுச் சொன்னால், அதில் அர்த்தமிருக்கிறது. ஆனால், ஒரு மிருகத்தை கொலை செய்து, அதன் இரத்தத்தை பூமியில் ஓடச்செய்வது எப்படி நம்மை இறைவனிடம் நெருங்கச் செய்யும்?*

*இ) திர்மிதி மற்றும் இப்னு மாஜா ஹதிஸ்களின் படி, பக்ரீத் பண்டிகையன்று முஸ்லிம்கள் செய்யும் செயல்களில், அல்லாஹ்விற்கு மிகவும் பிடித்தமானது குர்பானி ஆகுமாம். ஏன் இப்படி?*

*ஈ) ஒரு மிருகத்தின் இரத்தம் பூமியில் சிந்தப்படுவதில் அல்லாஹ்விற்கு ஏன் இவ்வளவு பிரியம்? இலட்சக்கணக்கான மிருகங்கள் பக்ரீத் அன்று பலியிடப்படுகின்றது, இரத்தம் ஆறாய் ஓடுகின்றது. இதில் என்ன அல்லாஹ்விற்கு பிடித்தமான செயல் வந்துவிடுகின்றது? மிருகங்களின் இரத்தம் பூமியில் சிந்தப்படுவதில் ஏதாவது முக்கியமான இஸ்லாமிய இறையியல் தத்துவம் அடங்கியுள்ளதா?*

*உ) அல்லாஹ்வை நெருங்க ஒரு ஆடு/மாடு/ஒட்டகம் பலியிடப்படவேண்டுமா?*

*ஊ) ஒரு ஆட்டிற்கு நிகரான பணத்தை, ஏழைகளுக்கு தானதர்மம் செய்வதைக் காட்டிலும், அந்த ஆட்டை கொலை செய்வது தான் அல்லாஹ்விற்கு பிடித்தமான ஒன்றா? ஏன்?*

*அல்லாஹ் சொன்னான் ஆகையால், நாங்கள் செய்கிறோம் என்றுச்சொல்வதோ, ஆபிரகாமின் செயலை நினைவு கூறும்படி செய்கிறோம் என்றுச் சொல்வதோ மேற்கண்ட கேள்விகளுக்கு சரியான பதிலாக அமையாது. குர்பானியின் அருமை பெருமைகளை பார்க்கும் போது, மேற்கண்ட சாதாரண காரணம் நிச்சயமாக இருக்கமுடியாது.*

## 2) பழுதற்ற பிராணியே குர்பானிக்கு ஏற்றது

*குர்பானி கொடுக்கும் பிராணி, பழுதற்றதாக இருக்கவேண்டும் என்று முஹம்மது கட்டளையிட்டுள்ளார்.*

*குர்பானியின் சட்டங்கள் என்ற புத்தகத்தில் கீழ்கண்ட விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளது.*

***பிராணிகளின் தன்மைகள்***

*குர்பானிப் பிராணிகள் நல்ல திடகாத்திரமானதாகவும், ஆரோக்கியமானதாகவும் இருக்க வேண்டும். பொதுவாக எந்தக் குறையும் இல்லாததாக இருக்க வேண்டும்.*

*தெளிவாகத் தெரியும் நொண்டி, தெளிவாகத் தெரியும் பார்வைக் குறை, தெளிவாகத் தெரியும் நோய், எலும்பில் மஜ்ஜை இல்லாத மெலிவு ஆகிய குறைபாடுகளுடையவற்றைக் குர்பானி கொடுப்பது கூடாது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

*அறிவிப்பவர் : அல்பரா பின் ஆசிப் (ரலி)*

*நூற்கள் : திர்மிதீ(1417), அபூதாவூத்(4293), நஸயீ(4294) , இப்னுமாஜா (3135), அஹ்மத் (17777)*

*அல்லாஹ்வை நெருங்க ஏன் ஒரு பிராணி பலியிடப்படவேண்டும் என்ற கேள்வி ஒரு புறமிருக்க, அந்த பிராணி பிழையற்றதாக இருக்கவேண்டும் என்பது முஹம்மது போட்ட நிபந்தனையாகும். இறைவனுக்கு நாம் சமர்ப்பிக்கும் எதுவும் பிழையற்றதாகவும், நேர்த்தியானதாகவும் இருக்கவேண்டும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், ஏன் ஒரு மிருகம் பிழையற்றதாக இருக்கவேண்டும்? என்பது தான் கேள்வி.*

*நாம் இதுவரை குர்பானி பற்றி இரண்டு முக்கியமான விவரங்களை கண்டுள்ளோம். முதலாவதாக, குர்பானியைக் கொண்டு மக்கள் அல்லாஹ்வை நெருங்க முடியும், இரண்டாவதாக, அந்த குர்பானி பிராணியானது பழுதற்ற ஒன்றாக இருக்கவேண்டும்.*

## 3) பாவநிவார பலியும், பழுதற்ற பிராணியும்

*இறைவனுக்கு ஏன் நாம் மிருகங்களை பலியிடவேண்டும்? என்ற கேள்வியை முஸ்லிம்களிடம் கேட்டால், அதற்கான பதில் கிடைக்காது. ஏனென்றால், குர்-ஆனோ, ஹதீஸ்களோ இக்கேள்விக்கான பதிலை தருவதில்லை. எனவே, முந்தைய வேதமாகிய தவ்ராத்தை சிறிது ஆய்வு செய்து பார்த்தால், இதற்கான பதில் முழுவதுமாக கிடைக்கும்.*

*தவ்ராத்தில் லேவியராகமம் புத்தகத்தின் 4 மற்றும் 5வது அத்தியாயத்தில் எப்படி இஸ்ரவேலர்கள் பாவநிவாரண பலியை செலுத்த வேண்டுமென்று மோசேயின் மூலமாக தேவன் கட்டளையிட்டுள்ளார். மேலும் அந்த பலியிடப்படும் பிராணி எப்படிப்பட்டதாக இருக்கவேண்டும் என்றும் சொல்லியுள்ளார்.*

*லேவி 4:1 பின்னும் கர்த்தர் மோசேயை நோக்கி:*

*லேவி 4:2 நீ இஸ்ரவேல் புத்திரரிடத்தில் சொல்லவேண்டியது என்னவென்றால், ஒருவன் கர்த்தருடைய கட்டளைகளில் யாதொன்றை அறியாமையினால் மீறி, செய்யத்தகாததைச் செய்து பாவத்துக்கு உட்பட்டால் அறியவேண்டியதாவது. (முழு அத்தியாங்களை படித்துப் பார்க்கவும்)*

*மனிதன் இறைவனுக்கு எதிரான பாவம் செய்யும் போது, அவன் இறைவனோடு நெருங்கும் உரிமையை இழக்கின்றான். எனவே, அவன் மறுபடியும் இறைவனோடு நெருங்கவேண்டுமென்றால், அவனது ஸ்தானத்தில் இன்னொருவர் இரத்தம் சிந்தவேண்டும். ஆகையால், ஒரு பழுதற்ற பிராணியை தெரிவு செய்து, பலியாக கொடுக்கும் படி இறைவன் கட்டளையிட்டார்.*

## 4) நிஜமிருக்க நிழலை பின் தொடர்வது ஏன்?

*மிருகங்களின் பலியும் இரத்தமும் பாவங்களை நீக்கினால், ஏன் இயேசு மறுபடியும் குர்பானி (பலி) ஆக வேண்டும்?*

*மனிதன் தான் செய்யும் பாவங்களை போக்கிக்கொள்ள, பிராணிகளை பலியிடுவதை ஒரு நிழலாட்டமாக தேவன் பழைய ஏற்பாட்டில் சுட்டிக்காட்டினார். ஆனால், அதன் நிஜத்தை நாம் இயேசுவில் காணமுடியும்.*

*பழைய ஏற்பாட்டில், எந்த ஒரு இடத்திலும், பிராணிகளின் பலிகளினால் பாவங்கள் முழுவதுமாக "நீக்கப்படும்" என்றுச் சொல்லப்படவில்லை. பழைய ஏற்பாட்டில் பாவநிவாரணம் என்ற வார்த்தைக்கு பயன்படுத்தப்பட்ட எபிரேய பதம் "Kaphar", இதன் அர்த்தம் "மூடுவது (Covering)" என்பதாகும், "முழுவதுமாக நீக்குவது" என்று அர்த்தமாகாது [2]. இதே வார்த்தையைத் தான் நோவா ஒரு பேழையை செய்து, அதை கீலினால் பூசு (மூடு) என்று தேவன் கட்டளையிட்டதிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

*லேவி 4:20 பாவநிவாரணபலியின் காளையைச் செய்தபிரகாரம் இந்தக் காளையையும் செய்து, இவ்வண்ணமாய் ஆசாரியன் அவர்களுக்குப் பாவநிவிர்த்தி (எபிரேயம்: Kaphar) செய்யக்கடவன்; அப்பொழுது அது அவர்களுக்கு மன்னிக்கப்படும்.*

*பல நூற்றாண்டுகளாக பல்லாயிரக்கணக்கான பிராணிகள் யூத ஆசாரியர்களால் பலியாக்கப்பட்டு, இரத்தம் சிந்தப்பட்டது, இது நம்முடைய பாவத்தின் வீரியத்தை தெரியப்படுத்துகிறது. இந்த மிருகங்களின் இரத்தம் பாவங்களை "மூடும்" திரைபோன்று செயல்படுகின்றதே தவிர அவைகள், நம் பாவங்களை "முழுவதுமாக நீக்குவதில்லை". இதைத்தான் எபிரேயர் 10:4,10-12 வசனங்கள் தெளிவாகச் சொல்கிறது, மேலும், யார் மூலமாக பாவங்கள் உண்மையாக நீக்கப்படும் என்பதையும் சொல்கிறது.*

*எபிரேயர் 10:4 அல்லாமலும், காளை வெள்ளாட்டுக்கடா இவைகளுடைய இரத்தம் பாவங்களை நிவிர்த்திசெய்யமாட்டாதே.*

*10:10 இயேசு கிறிஸ்துவினுடைய சரீரம் ஒரேதரம் பலியிடப்பட்டதினாலே, அந்தச் சித்தத்தின்படி நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.*

*10:11 அன்றியும், எந்த ஆசாரியனும் நாடோறும் ஆராதனை செய்கிறவனாயும், பாவங்களை ஒருக்காலும் நிவிர்த்தி(periaireo) செய்யக்கூடாத ஒரேவித பலிகளை அநேகந்தரம் செலுத்திவருகிறவனாயும் நிற்பான்.*

*10:12 இவரோ, பாவங்களுக்காக ஒரே பலியைச் செலுத்தி, என்றென்றைக்கும் தேவனுடைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்து,*

*இயேசுக் கிறிஸ்து ஒரே தரம் குர்பானியாகி(பலியாகி), எல்லோருடைய பாவங்களை நீக்கினார் என்பது தான் நிஜம், பிராணிகளின் குர்பானி வெறும் நிழல் தான்.*

*எபிரேய 10:11ம் வசனத்தில் "நிவர்த்தி" என்ற வார்த்தை கிரேக்க மூல மொழியில் "Periaireo" என்று வருகிறது. இதன் அர்த்தம் "மூடுவது – Covering" என்று அல்லாமல், "முழுவதுவாக நீக்குவது" என்பதாக வருகிறது [3]. ஆக, பழைய ஏற்பாட்டில் பிராணிகளின் பலிகளினால் உண்டாகும் பாவநிவர்த்தி என்பது, வெறும் பாவத்தை மூடுவதாக அமைகிறது, ஆனால், இயேசுவின் மூலமாக வரும் பாவநிவர்த்தி என்பது, "பாவத்தை முழுவதுமாக நீக்குவது" ஆகும்.*

## முடிவுரை:

*பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்டது போல, பிராணிகளின் பலிகளும் இரத்தம் சிந்துதலும், மனிதர்களின் பாவங்களை வெறும் மூடுகிறது, அவைகளை நீக்குவதில்லை. பிராணிகளின் இரத்தம் ஆறாய் ஓடுவதைக் காணும் போது, நம் பாவங்களின் விளைவை நாம் அறிந்துக்கொள்ளலாம். நாம் எவ்வளவு கீழ்தரமாக பாவங்கள் செய்து இறைவனின் கோபத்துக்கு ஆளாகி இருக்கிறோம். இறைவன் சுயமாக நம்மை மன்னிக்க ஒரு வழியைக் கொடுத்தால் தவிர, நாம் செய்யும் நற்செயல்கள், நம் பாவங்களை நீக்கவும், இறைவனோடு நாம் நல்லுறவு பெறவும் போதுமானதாக இல்லை. எனவே தான், இறைவன் இயேசுவாக பூமியில் வந்து, அனைவருக்காகவும் ஒரே தரம் பலியாகி, நம் சுமைகளை நீக்கி, நம்மை தம்மிடம் சேர்த்துக்கொண்டார். இதனை புரிந்துக்கொள்ளாமல், முஸ்லிம்கள் இன்னும் குர்பானி என்ற பெயரில் பிராணிகளை பலியிட்டுக்கொண்டு இருக்கிறார்கள்.*

***அடிக்குறிப்புக்கள்:***

[1] Qurbani - **https://en.wikipedia.org/wiki/Qurbani**

**[2] *எபிரேயம்* - Kaphar**

**H3722**

כּפר

**kâphar**

kaw-far'

A primitive root; **to cover** (specifically with bitumen); figuratively to expiate or condone, to placate or cancel: - appease, make (an) atonement, cleanse, disannul, forgive, be merciful, pacify, pardon, to pitch, purge (away), put off, (make) reconcile (-liation).

[3] ***கிரேக்கம்* - Periaireo**

**G4014**

περιαιρέω

periaireō

per-ee-ahee-reh'-o

From G4012 and G138 (including its alternate); **to remove all around, that is, unveil, cast off (anchor); figuratively to expiate: - take away (up).**

---

பக்ரீத் கட்டுரைகள் பக்கம்

ரமளான் கட்டுரைகள் பக்கம்

உமரின் கட்டுரைகள் பக்கம்